# உங்களுடைய இளவேனிற்கால விடுமுறை சில மணிகளுக்கப்பாலே தான் உள்ளது!

இந்தியாவின் ஒவ்வொரு பகுதியும் ஆயிரக்கணக்கான வியப்பூட்டும் ஆனந்தத்தை கட்டாயமாக உங்களுக்கு வழங்கும். இவைகளை சில மணி நேரங்களிலேயே அடைந்து விடலாம்—விமான மூலம்.

## வடக்கு

**கஷ்மீர் :** பூக்கள் குலுங்கிச் சிரிக்கும் விந்தையுலகம். மீன் பிடித்தல், படகு விடுதல், மலையேறுதல் போன்ற பொழுது போக்குகள். அருகிலுள்ள விமான நிலையம். ஸ்ரீநகர்.

**மதுரா :** கிருஷ்ண பரமாத்மாவின் பிறப்பிடம் ஹோலிப் பண்டிகை மிகச் சிறப்பாக இங்கே கொண்டாடப்படுகிறது. அருகாமையிலுள்ள விமான நிலையம் : டெல்லி.

**அமிர்தஸர் :** "பைசாகி" விழாவை சுறுசுறுப்பான "பங்கரா" நடனத்துடன் கொண்டாடுமிடம். இங்கிருந்து இந்தியாவின் எல்லா பகுதிக்கும் விமான மூலம் செல்ல வசதியை கொண்டது.

## தெற்கு

**கொடைக்கானல் :** தேன் சொறியும், மணம் கமழும் காட்டுப் பூக்களுள்ள குன்றுகள். அருகிலுள்ள விமான நிலையம் ; மதுரை.

**திருச்சிராப்பள்ளி ;** 800 மீட்டர் உயரத்திலுள்ள கற்கோவிலுக்கு புகழ்பெற்ற இடம். காவேரி மீதுள்ள ஸ்ரீரங்கத்திலிருக்கும் கோயில் அருகிலே தான் உள்ளது. விமான நிலையம்.

**பிருந்தாவன் பூங்கா;** வானளாவும் ஃபவுன்டன்களையும், வண்ண விளக்குகளையும் கொண்ட பூங்காக்கள், அருகிலுள்ள விமான நிலையம்: பங்களூர்.

## கிழக்கு

**டார்ஜிலிங் :** பிரமிக்க வைக்கும் பனிபடர்ந்த கஞ்சன்கங்கா. அதிக உயரத்திலே அமைக்கப் பட்டிருக்கும் குதிரை பந்தய மைதானம் இங்கே உள்ளது. அருகிலுள்ள விமான நிலையம் பாக்தோக்ரா.

**பாட்னா :** மகத சாம்ராச்சியத்தின் புராதன தலைநகரம். தற்போது மிக விரைவில் விருத்தியாகி வரும் நவீன நகரம். இங்கிருந்து இந்தியாவின் மற்ற பகுதிகளுக்கு விமான மூலம் சென்று விடலாம்.

**கசிரங்கா :** வனவிலங்கு சரணாலயம். இங்கே யானைமீது அமர்ந்து காண்டா மிருகங்களை புகைப்படம் எடுக்கலாம். அருகிலுள்ள விமான நிலையம் : ஜோர்ஹட்.

**மனுஸ் :** பிரமிக்கத்தக்க, கட்டுக் கடங்காத காடுகள், பலதரப்பட்ட பட்சிகள், மிருகங்கள் உள்ள வன விலங்குச் சரணாலயங்கள். அருகிலுள்ளவிமான நிலையம்: கௌஹாத்தி.

## மேற்கு

**கன்ஹா:** புலி, மான், காட்டெருமை போன்றவற்றின் சரணாலயம். அருகிலுள்ள விமான நிலையம்: ராய்பூர்.

**கர்னலா:** பட்சிகளை காண விரும்புவோரின் கண்களுக்கு விருந்தளிக்கும் பட்சிகள் புகலிடம். அருகிலுள்ள விமான நிலையம்: பம்பாய்.

**துவாரகா :** கிருஷ்ண பரமாத்மா ஆண்ட புராதன நகரம், யாத்ரீகர்களுக்கு இன்று ஒரு புனித ஸ்தலம். அருகாமையிலுள்ள விமான நிலையம் : ஜாம்நகர்.

எங்கிருந்தாலும் குறைந்த காலத்தில் சென்றுவிடலாம்.

நவீன விரை வேக விமானங்கள் மூலம், இந்தியன் ஏர்லைன்ஸ் இந்தியாவின் மூலைமுடுக் கிற்கெல்லாம் இட்டுச்செல்லும்.

எல்லா ஏற்பாடுகளுக்கும் உங்களுடைய பயண ஏஜெண்ட் உதவி செய்வார்.

பல இடங்களுக்கும் செல்லுங்கள்

ஏ முலம் பறந்து

**இந்தியன் ஏர்லைன்ஸ்**

CAS/397/Tam.




● 'மகிழ்கிறேம்... ஆனல்' எனும் தலையங்கத்தில் மூன்று பெரிய விஷயங்களை எளிதான முறையில் தொகுத்து வழங்கியுள்ள நுணுக்கம் பெரும் சாதனை.

மதுரை—1 பி. ரா. தேவதாஸ்

● பொதுமேடையில் சொல்வதையும் சொல்லி விட்டுப் பிறகு, 'இது என் சொந்த அபிப்பிராயம்' என்று நழுவப் பார்க்கும் ஜனதா மந்திரிகளைத் தலையங்கத்தில் கண்டித்ததைப் பாராட்டுகிறேன்.

ஒரு ஐ. ஏ. எஸ். கலெக்டரோ, அல்லது பாங்கின் ஜெனரல் மானேஜரோ இம்மாதிரி ஏதாவது, அரசாங்கக் கொள்கைக்கு எதிர்க் கருத்தாகச் சொல்ல முடியுமா? சொல்லி விட்டு, ''அது என் சொந்தக் கருத்து'', என்று தப்பித்துக்கொள்ளத்தான் முடியுமா?

ராயப்பன்பட்டி ஈஸ்வர் குமார்

● இந்தி விஷயத்தில் பிரதமரை முதல்வர் எம். ஜி. ஆர் முழுமையாக நம்பிவிட வேண்டாம் என்று தலையங்கத்தில் கேட்டுக் கொண்டிருக்கிறீர்கள்.

24 மற்றும் 25.1.1979 ஆகிய நாட்களில் கோவையில் நடைபெற்ற இந்தித் திணிப்பு எதிர்ப்பு மாநில மாணவர் மாநாட்டில், இறுதியில் உரை நிகழ்த்திய முதல்வரின் பேச்சினைக் கேட்க நேர்ந்தபோது அவர் மொழிப் பிரச்னை விஷயத்தில் தெளிவான, உறுதியான கருத்தினைக் கொண்டு இருக்கிறார், ஏமாற மாட்டார், தமிழ் மக்களைஏமாற்றவும் மாட்டார் என்பதைத் தெளிவாக உணரமுடிந்தது. மேலும் இந்தித் திணிப்பு சம்பந்தமாக 1962—ஆம் ஆண்டில் கல்கி இதழில் தாம் எழுதிய கட்டுரையினை மாநாட்டில் வாசிக்கச் செய்து, அதே கொள்கைதான் இன்றும் தனது கொள்கை என்றும் கூறினார்.

கோவை—1 கா. சுப்பையா

● ஜோதிஷத்தால் விதியை மாற்ற முடியுமோ, முடியாதோ, அருமையான ஒரு கலந்துரையாடலைப் படிக்கும் வாய்ப்பும் அதிர்ஷ்டமும் வாசகர்களுக்குக் கிடைத்தது. இந்த அதிர்ஷ்டத்திற்குக் காரணம் ஜோதிஷமா, விதியா என்பது வேறு விஷயம்.

திருவனந்தபுரம் எஸ். எஸ். மணி

● 'Face to Face' என்ற தலைப்பின் கீழ் ''ஜோதிடத்தினல் விதியை மாற்றலாமா'' என்ற உரையாடலைப் பிரசுரித்ததற்கு மிக்க நன்றி.

என்னைச் சுற்றியும், வேதாவைச் சுற்றியும் அமைத்துள்ள ஜாதகக் கட்டங்களில் உள்ள கிரஹநிலைகளில் பிழைகள் உள்ளன. இதற்கு ஓவியர்தான் பொறுப்பேயன்றி நான் அல்ல. மேலும் derived Science என்பது அச்சுப் பிழை. Divine Science என்றே இருக்க வேண்டும்.

சென்னை—17 கே. என். சரஸ்வதி

● காஞ்சிப் பெரியவரின் ''ஒரு வள்ளலும் ஒரு நாணய சாலையும்'' என்ற அருள்வாக்கு அற்புதம். நெஞ்சை நெகிழச் செய்தது. பக்திப் பரவசத்தில் ஆழ்த்தியது.

சென்னை—11 எம். ஜே. சேதுராமன்

● கல்கி 4.2.79 இதழ் ராஜாஜி வாழ்க்கை வரலாறு தமிழாக்கத்தில் 'மொலிபள்ளி' என்பது மேழிப்பள்ளி யென்று இருக்க வேண்டும்.

'எழவர்கள்' என்பது ஈழவர்கள் என்றிருக்க வேண்டும். மரமேறும் தொழிலீடுபட்டிருந்த கேரள வகுப்பினர்.

தஞ்சாவூர்—7 காந்திஆசிரமம் கிருஷ்ணன்.

● ''பதம்'' என்ற கதை, படித்தவர் அனைவருடைய மனத்தையும் ''பதம் பார்க்கும்'' என்பதில் சந்தேகம் இல்லை.

ஒரு கேள்வியின் மூலம் ஒரு வகுப்பையே பதம் பார்த்து விட்ட அவசர முடிவின் காரணமாக எழுந்த இறுதி முடிவு என் மனத்தைக் கலங்கச் செய்து விட்டது.

குளித்தலை ஜி. ராமதாஸ் பாரதி

● 'இந்த நேரத்தில் இவள்' நாவலின் கருத்தை ஜெயகாந்தன் கடந்த இரண்டு வாரக் கல்கியில் 'இந்தப் பின்னணியில்' என்ற தலைப்பில் தந்து விட்டார், அதன் தொடர்ச்சி 'பாட்டிமார்களும் பேத்திமார்களும்' இந்த வார மூன்றும் அத்தியாயம் முதல் தொடங்குகிறது. மிகவும் சுவாரஸ்யமாக இருக்கிறது.

காரைக்குடி—1 சுதி. சுப்பிரமணியன்

● ''முதல் சாதனைகள்'' என்ற தலைப்பில் நிமாய் கோஷ் — அவர்களைப்பற்றி 'சலன்' எழுதியுள்ளார்.

கடைசி பாராவில், ''இப்படம்தான் முதன் முதலில் ரஷ்யாவில் பதினெட்டு தியேட்டர்களில் ஒரே சமயத்தில் வெளியிடப்பட்டது..'' என்று இருக்கிறது. ஆனல் உண்மை என்ன வெனில் நூற்று எண்பத்தொரு (181) தியேட்டர்களில் ஒரே சமயத்தில் வெளியிடப்பட்டது.

சென்னை—8 இரா. பரந்தாமன்.

● 'சாரணர் உலகம் சாதாரணம் அல்ல' கட்டுரையில் இந்தியாவில் உள்ள மாநிலங்கள் 36 என்று இருந்தது. அது எந்த இந்தியாவில் என்று தெரியாமல் தலைமயிரைப் பிய்த்துக் கொண்டேன். இதுவும் சாதாரண விஷயமல்ல.

வாடிவீஸ்வரம் எஸ். பி. ஆறுமுகம்.

# Face to Face

# சென்ஸார் அவசியம் தானா?

உரையாடலில் பங்கு பெறுவோர்:

திரு. S. P. முத்துராமன் — திரைப்பட டைரக்டர்

திரு. தியாகராஜன் ('அசோகமித்திரன்') — சென்ஸார் போர்டு அங்கத்தினர்

அசோகமித்திரன்: வணக்கம் மிஸ்டர் முத்துராமன்...! திரைப்படத் தணிக்கைக் குழுவினால் உங்கள் முயற்சிகள் எதற்கேனும் நேரடியாகப் பாதிப்பு ஏற்பட்டிருக்கிறதா?

முத்துராமன்: ... ஓ... உண்டே...! 'காலங்களில் அவள் வசந்தம்' என்ற படத்தில் குறிப்பிடும்படியான பாதிப்பு எனக்குத் தணிக்கைக் குழுவால் ஏற்பட்டது. அப்படத்தில் ஸ்ரீவித்யாவும் சந்திரகலாவும் அக்கா தங்கைகள். அக்கா மனநோய் உள்ளவள். தங்கைக்கு மணமாகி விடுகிறது. திருமணம் செய்து வைத்தால் அக்காவின் மனநோய் சரியாகி விடும் என்கிற நிலைமை. எவரும் அவளை மணக்க முன்வராத நிலையில் தங்கையே தன் கணவனை அக்காவுக்கு மணம் முடித்து வைக்கிறாள். தன் கணவனை விவாகரத்து செய்யும்படி காட்சி இருந்தால்தான் தங்கை தன் கணவனை அக்காவுக்கு மணமுடித்து வைப்பது போன்ற காட்சியைச் சேர்க்க முடியும் என்று தணிக்கைக் குழுவினர் கூறிவிட்டனர்!

அசோகமித்திரன்: ஹிந்து விவாக சட்டப்படி Bigamy என்று சொல்லப்படும் இரட்டை தாரமுறை நம் நாட்டில் தண்டனைக்குரியது. அதாவது ஒரு மனைவி இருக்கும் போதே அவன் இன்னொருத்தியைத் திருமணம் என்று செய்து கொள்ள முடியாது... அதனால்தான் தணிக்கைக் குழுவினர் உங்கள் படக்கதையை மாற்றக் கூறியிருக்க வேண்டும்.

முத்துராமன்: நடைமுறை வாழ்க்கையில் நாம் எவ்வளவோ பார்க்கிறோம்... சட்டம் என்று வரும்போது இதெல்லாம் அனுசரிக்க வேண்டி உள்ளது. தணிக்கைக் குழுவினர் சொன்னபடி தங்கை தன் கணவனை விவாகரத்து செய்து விட்டுப் பிறகு அவளே தன் கணவனை அக்காவுக்கு மணம் முடித்து வைப்பதுபோல் காட்சிகள் எடுத்துப் பிறகுதான் ரிலீஸ் செய்தேன். மன உணர்வுகளின் வெளிப்பாடு, பெண்ணின் தியாக மனப்பான்மை ஆகியவற்றை அடிப் படையாகக் கொண்ட கதையில் 'சட்டம்... விவாகரத்து' போன்ற அம்சங்கள் சேர்ந்ததனால் கதையின் அடிப்படைத் தன்மையில் பாதிப்பு ஏற்படத்தான் செய்தது... படம் சுமாராகத்தான் ஓடிற்று. வெற்றி பெறாததன் காரணங்களில் இதுவும் ஒன்று...

அசோகமித்திரன்: தணிக்கைக் குழு ஒரு



போலீஸ்காரர் மாதிரி. போலீஸ்காரரை யாருக்கும் பிடிக்காது. அவரில்லாமலும் முடியாது. ஒருவர் எடுத்த படத்தை வெட்டிச் சிதைக்க வேண்டும் என்ற எண்ணம் எந்தத் தணிக்கை அங்கத்தினருக்கும் இடையாது. சில விதிமுறைகளை வலியுறுத்தும்போது உரசல் ஏற்படுவது தவிர்க்க முடியாதது. இப்போது தணிக்கைக் குழு தணிக்கை செய்யுமுன்னர் தயாரிப்பாளர், அல்லது படத்தின் டைரக்டர் தங்களது அபிப்பிராயங்களை வெளியிடுவதற்காக ஒரு சந்திப்புக்கு வாய்ப்பளிக்கிறார்கள். இம்முறை பல தயாரிப்பாளர்களுக்கு மிகவும் உபயோகமாக உள்ளது. தயாரிப்பாளர், டைரக்டர் ஆகியவர்களின் வாதங்களை ஏற்றுக் கொண்டு தணிக்கைக் குழு பல சந்தர்ப்பங்களில் தங்களது கருத்தை மாற்றிக் கொண்டுள்ளனர். ஆனால் எல்லாத் தயாரிப்பாளர்களும் இந்தச் சந்திப்பைப் பயன்படுத்திக் கொள்வதில்லை. பல தருணங்களில் ஓர் உதவியாளரை மட்டும் அனுப்பி வைக்கிறார்கள்.

# ரமணி ரஞ்சன் ஜேனா



ஸ்ரீ கிருஷ்ண பகவான் பிருந்தாவனத்தை விட்டுச் சென்று விடுகிறார். அவர் பிரிவு தாங்காமல் செடி கொடிகள், மரங்கள், ஜந்துக்கள் ஆகியவை கூடத் தாபப்படுகின்றன. கோபியர்களின் ஏக்கத்தைக் கேட்க வேண்டுமா? — இக்காட்சியை ஓர் இந்திய இளைஞர் 'ஒடிஸி' நாட்டிய முறையில் சித்தரித்த போது ஒரு மேல்நாடு ரசிகர் கண்களில் நீர் தாரை தாரையாக வழிந்தோட மேடைக்கே ஓடி வந்து விட்டாராம்!

நிகழ்ச்சி நடந்தது சென்ற ஆண்டு தொடக்கத்தில் பாரீசில் உள்ள பிரபல இந்தியக்கலை அரங்கான 'மண்டப'த்தில். நடன மாடியவர் இந்தியாவின் தலைசிறந்த ஆண் 'ஒடிஸி' ஆட்டக்காரரான திரு ரமணி ரஞ்சன் ஜேனா அவர்கள்!

இவரது ஏழாவது வயதிலிருந்தே இவருக்குப் படிப்பைவிட நாட்டியத்தில்தான் அதிக ஈடுபாடாம். கிராமிய நடனங்களைக் கண்டு அவற்றில் மனத்தைப் பறி கொடுத்த இவர், தமது இளம் பிராயத்திலேயே ஒரு நடனக் குழுவில் சேர்ந்து விட்டார். பலரிடம் பயிற்சி பெற்றுக் கடைசியாக இந்தியாவின் தலை சிறந்த 'ஒடிஸி' பயிற்சியாளரான திரு கேலுசர மஹாபாத்ராவிடமும் சிஷ்யரானார். ரமணி ரஞ்சன் இக்கலையில் தற்போது ஓர் எம். ஏ. பட்டதாரி.

பயிற்சியாளர்களாக மட்டுமே ஆண்கள் இருக்க முடியுமே தவிர 'ஒடிஸி' நடனத்தை ஆண் நடனக்காரர்கள் மேடையில் தனிக் கச்சேரியாக நடத்தினால் அவ்வளவாக எடுபடாது என்று பொதுப்படையாகப் பரவி இருந்த கருத்தைத் தகர்த்தெறிந்தவர் ரமணி ரஞ்சன்!

தான் நடனம் பயின்ற கலா விகாஸ் கேந்த்ராவில் உயர்மட்டப் பயிற்சியாளராகப் பணியாற்றிய இவர் இடையே தமது குருநாதருடன் பம்பாய் சென்று மூன்று மாதங்கள் மேலாகத் தங்கிப் பலருக்கு 'ஒடிஸி' பயில்வித்தார்.

திரு ஒய். ஜி. துரைசாமி மூலம் ரமணி ரஞ்சனின் திறமைகளைக் கேட்டிருந்த ஸ்ரீமதி ருக்மிணி தேவிக்கு அவரது திறமையை நேரில் பார்க்கும் வாய்ப்புக் கிடைத்தது. எவ்விதத் தயக்கமும் இன்றி ரமணிரஞ்சனைக் கலாக்ஷேத்திர மாணவிகளுக்கு 'ஒடிஸி' நடனத்தைக் கற்றுக் கொடுக்கப் பயிற்சியாளராக நியமித்தார்.

ஒடிஸி நடனத்தின் சில நுணுக்கமான தகவல்களைச் சொல்லும்படி ரமணியிடம் கேட்டபோது அவர் சொன்னது:

பரத முனிவரின் நாட்டிய சாஸ்திரத்தின் ஒரு கிளைதான் 'ஒடிஸி' நடனமும். ஒரிஸ்ஸாவில் பூரி ஜகந்நாதர் ஆலயத்தில் தேவதாசிகளால் இறை வழிபாட்டின் சமயம் வழிவழியாக ஆடப்பட்டு வந்த கலை இது. கலிங்க

முத்துராமன்: தணிக்கைக் குழு படம் பார்க்கும் தினத்துக்கும், படத்தை ரிலீஸ் செய்வதற்காக முன்பே தீர்மானிக்கப்பட்ட தினத்துக்கும் பெரும்பாலும் போதிய இடைவெளி கிடைப்பதில்லை. இதனால் தான் இவ்வாய்ப்பைச் சிலர் பயன்படுத்திக் கொள்ள முடியாமல் போய்விடுகிறது.

அசோகமித்திரன்: சென்னை வரையில் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய நான்கு மொழிப் படங்களைத் தணிக்கையாளர்கள் தணிக்கை செய்ய வேண்டும். தற்போது ஏராளமான படங்கள் வெளிவருகின்றன. ஆதலால் ஒரு நெருக்கடி இருக்கத்தான் செய்கிறது.

முத்துராமன்: ஓரிரண்டு சந்தர்ப்பங்களைத் தவிர பொதுவாக எனக்குத் தணிக்கைக் குழுவால் அதிகம் தொந்தரவு என்று உண்டானதில்லை... அதற்குக் காரணம் நான் படம் எடுக்கும் போதே மக்களின் எதிர்பார்ப்பையும், அதே சமயம் தணிக்கைக் குழுவினரின் அனுமதி எல்லையையும் மனத்தில் கொண்டு எடுத்துவிடுவேன். குறிப்

மன்னர்கள் இக்கலைக்குப் பெரும் ஆதரவு அளித்து வந்தனர். நாளாவட்டத்தில் ஆண்களும் கற்றுக் கொண்டு நடனப் பயிற்சியாளர்களாயினர். ஆனாலும் சிறிது சிறிதாக நலிவுற்று வந்த இக்கலை மறுமலர்ச்சி பெற்றது கடந்த இருபது வருடங்களுக்கு உள்ளாகத்தான்! இத்தகைய மறுமலர்ச்சியின் பிரதானகர்த்தா ஸ்ரீ கேலு சரண் மஹாபாத்ரா.

'ஒடிஸி' நடனத்துக்குப் பக்திரஸமான பாடல்கள் — குறிப்பாக ஜெயதேவரின் கீத கோவிந்தத்தின் பாகங்கள் — பாடப் படுகின்றன.

கவனத்துடனும், பூரணத்துவமான பயிற்சி பெற்றும் இந்த நடனத்தை ஆடும்போது பார்ப்பவருக்குப் பக்திப் பரவசம் உண்டாகும்படி இருக்கும். அரைகுறைப் பயிற்சியுடன் நடனமாடினால் உடல் அசைப்புக்களில் விரசம் தட்டும்படி கூட ஆகிவிடும்.

பேட்டி: ரங்கா



ஒடிஸி நடனத்தில் அண்மைக் காலத்தில் பெரும் புகழ் பெற்ற பெண்மணி திருமதி சோனல் மான்சிங். இவரும் கேலுசரண் மஹாபாத்ராவிடம் பயின்றவரே. மேலைநாடுகளில் நடன நிகழ்ச்சிகள் நிகழ்த்தச் சென்றிருந்த சமயம் கார் விபத்துக்குள்ளானார் சோனல். இதன் பிறகு இவரால் நாட்டியம் ஆடவே முடியாது என்று மருத்துவ நிபுணர்கள் கூட சொல்லி விட்டார்கள். ஆனால் விடாமுயற்சியுடன் கலையை அப்பியசித்து மறுபடியும் ஆடிப் புகழ் குவித்தார் சோனல் மான்சிங். இவ்விதழ் மேலட்டையை அலங்கரிக்கிறார் அவர்.

வண்ணப்படம் எடுத்தவர்: வித்யாவிரதா.

பிட்ட கதையைப் படமாக்கினால் பின்னால் தணிக்கைக் குழுவால் ஆட்சேபிக்கப் படுமோ என்ற சந்தேகம் தோன்றினால் முதலிலேயே கதையையும் தணிக்கைக் குழுவில் கூறி அவர்களது அபிப்பிரா யத்தைப் பெற்று விடுகிறேன்!

அசோகமித்திரன்: பெரும்பாலான மேலை நாடுகளில் தணிக்கை முறை கிடையாது. ஆனால் இங்கு நமது மக்களிடையே சினிமா வின் பாதிப்பு பெருமளவுக்கு உள்ளது. திரைப்படங்களுக்குத் தணிக்கை முறை தற்போதைய சூழ்நிலையில் அவசியம் என்றே தோன்றுகிறது.

முத்துராமன்: இவ்விஷயத்தில் நான் முழு மனசாக உங்கள் கருத்தை ஏற்கிறேன். புள்ளி விவரப்படி ஒரு நாளைக்குச் சுமார் ஒரு லட்சம் பேர்களுக்கு மேலாக நம் நாட்டில் படம் பார்க்கிறார்கள். திரைப் படங்கள் மூலம் அவர்களது உள்ளங்களில் நாங்கள் ஒரு பாதிப்பை உண்டாக்கு கிறோம்... மக்களைத் தவறான வழிக்குத் தயாரிப்பாளர்களும், டைரக்டர்களும் இழுத்துச் சென்றுவிடக் கூடாது என்ற எண்ணத்தில் தணிக்கைக்குழு ஏற்படுத்தப் பட்டுள்ளது... அவசியம்தான்.

அசோகமித்திரன்: சினிமாவினால் மக்களின் உள்ளத்தில் ஏற்படும் பாதிப்பு சாதாரண மானதல்ல. இருட்டான ஓர் அரங்கில், பெரிதுபடுத்தப்பட்ட உருவங்களுடன் லயித்துப் போய் மூன்று மணிநேரம் ஒருவர் செலவிடும்போது அதன் பாதிப்பு அலாதி யானது. அதனால்தான் சினிமாவை Hot Medium என்கிறார்கள். அதோடு இன் னொரு விஷயம். ஒரு திரைப்படம் எங்கெல் லாம் யார் யாரை எப்படி எல்லாம் பாதிக் கும் என்பது நேரடியாகப் படத்தயாரிப் பாளருக்கோ, டைரக்டருக்கோ தெரிவ தற்கு வாய்ப்பே இல்லை... இந்நிலையில் படத்தயாரிப்போடு சம்பந்தப்படாத ஒரு குழு objective ஆக பார்த்துத் தணிக்கை செய்வது நல்லது.

---

ஒருவர்: இந்தக் கோழி ஒரு அதிசய கோழிங்க.
மற்றவர்: எப்படி?
ஒருவர்: முப்பது நாளும் முட்டை போடும். முப்பத்தோராவது நாள் No Stockனு ஒரு துண்டு சீட்டு போடும்.

அர். கோபாலகிருஷ்ணன்.



முத்துராமன்: சினிமா என்பது ஒரு கலை. கலையின் வெளிப்பாட்டில் முழுச் சுதந்திரம் வேண்டும் என்று ஒரு சாரார் வாதாடு கின்றனர்.

அசோகமித்திரன்: சினிமா ஒரு கலைதானா என்பதில் எனக்குச் சிறிது சந்தேகம் இருக் கிறது. தயாரிப்பு வரைதான் கலை. அதன் பிறகு பிரதிகள் எடுத்து லட்சக்கணக்கானோ ருக்குக் காண்பிக்கப் படும்போது வியா பாரம். ஷியாம் பெனகால் எம். எஸ். சத்யூ போன்ற கலைப்படங்கள் தயாரிக்கும் ஒருசிலர் தணிக்கைக்குழு தூக்கி எறியப் படவேண்டும் என்கின்றனர்... என் பயம் தணிக்கைக் குழு நீக்கப்பட்டு விட்டால் அதனால் முதலில் பாதிக்கப்படுவோர் கலைப் படங்களைத் தயாரிப்பவர்கள்தாம் என்பது. சந்தர்ப்பவாதிகள் இச் சுதந்திரத்தைத் துஷ்பிரயோகம் செய்வார்கள். வியாபார நோக்கு இருக்கும் வரை இந்தத் துறை கலை இலட்சியத்தைக் காட்டிலும் இலாபத்துக் காகவேதான் நாடப்படும்.

முத்துராமன்: மலையாளப் படங்களில் அளவுக் கதிகமான பாலுணர்வுக் காட்சிகள் இடம் பெறுகின்றன. ஹிந்தி படங்களில் முத்தக் காட்சிகள்கூட இடம் பெறுகின்றன. ஆங்கிலப் படங்களில் பாலுணர்வுக் காட் சிகள் ஏராளமாக இல்லையா? அப்படங்கள் எல்லாம் தமிழ்நாட்டில் ஓடுகின்றன. தமிழ்நாட்டு மக்கள் அவற்றைப் பார்க்க வில்லையா? தமிழ்ப் படங்களில் மட்டும் இக்காட்சிகளை அனுமதிக்காமல் தணிக்கைக் குழுவினர் வெட்டிவிடுகிறார்களே என்கிற குறை மக்களிடமும் சில தயாரிப்பாளர் களிடமும் உள்ளது. இம்மாதிரி வெளித் தோற்றமான முரண்பாட்டின் காரணம் எனக்குப் புரிந்தாலும் உங்கள் வாயாலேயே சொல்லி விடுங்களேன்!

அசோகமித்திரன்: ஒவ்வொரு பிரதேசத்தின் வாழ்க்கை முறையையொட்டி, நடை, உடை, பழக்க வழக்கங்கள் அத்திரைப் படங்களில் இடம் பெறுகின்றன. அத் தகைய படங்கள் வேறு மாநிலத்தில் திரையிடப்படும்போது பார்ப்பவர்கள் அவற்றை இந்த அம்சங்களில் தங்கள் மொழிப் படங்களோடு ஒப்பிடுவது சரி யானதல்ல. மேலும் ஒரு மலையாளப்படம் பெரிய நகரங்களில் ஓடக் கூடும். ஆனால் எல்லாத் தமிழ் ஊர்களிலும் கிராமங் களிலும் அது ஓட இயலாது. மலையாளப் படங்களில் சில, அற்புதமான கற்பனை வளமும் அழகும் கொண்டவையாக இருக் கின்றன. நாம் அந்த அம்சங்களில் ஏன் போட்டியிடக் கூடாது?

முத்துராமன்: 'பெண்ணைச் சொல்லிக் குற்ற மில்லை' என்ற படத்தில் ஒரு பெண் தனது முதல் இரவில் நிகழப் போகும் சம்பவங் களைக் கற்பனை செய்வதுபோல் அவளது முக பாவங்களைக் கொண்டே சித்திரித்தேன். கவனத்துடன் விரசம் தட்டாதவாறு படமாக்கியிருந்தேன்... இருந்தாலும் தணிக்கைக் குழுவில் நீக்கி விட்டனர்...

அசோகமித்திரன்: நான் அந்தப் படத்தைப் பார்க்கவில்லை. ஆதலால் அது பற்றிக் கூற முடியாது. ஆனால் தணிக்கைக் குழுவின

ரும் மனிதர்களே. அவர்களும் தவறு செய்யக்கூடும் என்று பொதுவாகச் சொல்லலாம்.

முத்துராமன்: தமிழ்ப்படங்களில் இடம் பெறும் வன்முறைக் காட்சிகள் பற்றி என்ன அபிப்பிராயம் கொண்டுள்ளீர்கள்?

அசோகமித்திரன்: தற்போது தமிழ்ப்படங்களில் இடம் பெறும் பெரும்பாலான சண்டைக் காட்சிகளை வன்முறைக் காட்சிகளாக நான் கருதவில்லை. அவை படத்துக்குக் கலகலப்பை ஊட்டும் அம்சமாகத்தான் கருதுகிறேன். ஆனால் பூனையைக் கதவுக் கிடையில் நசுக்குவது போல் ஒரு காட்சி... வன்முறை அல்லது குரூரம் என்பதற்கு இக்காட்சி ஓர் உதாரணம்... கழுத்தை நெரிப்பது, கை, கால்களை முறுக்குவது போன்றவை குரூரம், வன்முறைப் பாதிப்புக்கள் கொண்டவை.

முத்துராமன்: கராத்தே, ஜூடோ, குங்ஃபூ போன்ற சண்டைகளின் அடிப்படையில் நாங்கள் படங்களில் அமைக்கும் காட்சிகளைத் தணிக்கைக்குழு பெரும்பாலும் ஆட்சேபிப்பதில்லை...

அசோகமித்திரன்: சில காட்சிகளைத் தணிக்கைக் குழுவினரிடம் காட்டாமல், படம் தணிக்கை ஆன பின்பு படத்துடன் சேர்த்து வெளியிடுவது, போன்ற செயல்களைத் தயாரிப்பாளர்கள் செய்துவிடுகிறார்கள். இதனால் தணிக்கைக் காரர்களுக்கு நிரம்பக் கெட்டபேர் வந்திருக்கிறது.

முத்துராமன்: திரைப்படத் தொழிலில் நீண்ட நாட்கள் இருக்கும், இருக்க விரும்பும் எந்தத் தயாரிப்பாளரும் இச்செய்கையில் ஈடுபடமாட்டார்கள். மிகவும் கண்டிக்கத்தக்க விஷயமாகும் இது!... டி. வி. யில் திரையிடப்படும்போது அதற்கென்று ஒரு தணிக்கைக் குழுவும் உள்ளது.

அசோகமித்திரன்: மேல் நாடுகள் சிலவற்றில் டி. வி. படங்களுக்குக் கூடத் தணிக்கை கிடையாது. பெரியவர்கள் மட்டுமே பார்க்க வேண்டும் என்று கருதக்கூடிய திரைப்படங்களை நள்ளிரவுக் காட்சிகளாக டெலிவிஷனில் காட்டுகின்றனர். நம் நாட்டில் 'வயது வந்தவர்களுக்கு மட்டும்' என்று தணிக்கைக் குழுவால் சான்றிதழ் பெற்ற படங்களை டெலிவிஷனில் காட்டுவதில்லை என்று நினைக்கிறேன்!

முத்துராமன்: ஆமாம்... ஆனால் 'மயங்குகிறாள் ஒரு மாது' என்ற படம் 'யூ' சர்டிபிகேட் பெற்றதுதான். இருந்தாலும் அதைத் திரையிட டெலிவிஷனில் அனுமதி அளிக்கப்படவில்லை.

அசோகமித்திரன்: எனது சொந்தக் கருத்தின்படி திரைப்படங்களுக்கான தணிக்கைக் குழு இன்னும் சில ஆண்டுகள் இருக்கும். பிறகு அதுவாகவே நீங்கிவிடும். இனிவரப் போகும் தலைமுறையினரின் சமுதாய நோக்கு, கலாச்சாரப் பழக்கங்கள், மன முதிர்ச்சி ஆகியவை மிகவும் மாறுபட்டு இருக்கும். இந்நிலையில் திரைப்படங்களுக்குத் தணிக்கையின் அவசியமே இருக்காது என்பது என் எதிர்பார்ப்பு.

உரையாடல் ஏற்பாடு: நாயகன்
போட்டோ: மன்னை மூர்த்தி

# கிரிக்கெட் கற்கலாம்!

24

கோச்: கே. சந்திரசேகர்

படம்: ராஜ்... தயாரிப்பு: குண்டுமணி

பந்து வீச்சிலேயே 'லெக் ஸ்பின்' மிகக் கஷ்டம்.







முதல், இரண்டாவது, மூன்றாவது விரல்கள் பதிக்கும் விதம்.




ஈரானில்..
மக்கள் சக்தி
மக்கள் சக்தி
கொமெய்னி
பக்தியார்


என்ன முறைக்கிறீங்க? நான் செல்லப்பிள்ளையாக்கும்! அவர் ஒண்ணும் கண்டுக்க மாட்டார்!
உ.பி. குழப்பங்கள்


இந்தி திணிப்புக்கு எதிர்ப்பு
வெண்சாமரம் வீசுகிறார்!
மொரார்ஜிக்கு நன்றி

# கல்கி

1979 பிப்ரவரி 18
காளயுக்தி மாசி 6
மலர்: 37 இதழ்: 29




தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.

## வெறி

புட்டோவுக்கு மரண தண்டனை கிடைத்துள்ளது. மூன்று நீதிபதிகள் அவர் குற்றவாளியே என்று தீர்ப்பளித்தாலும் வேறு மூன்று நீதிபதிகள் அவர் குற்றமற்றவர் என்று தீர்ப்பளித்துள்ளனர். இறுதியில் ஏழாவதாகத் தலைமை நீதிபதி, குற்றவாளியே என்று தீர்ப்பளித்தவர்களின் பக்கமாகச் சாய்ந்துவிட, மரண தண்டனை உறுதிப்பட்டது.

புட்டோ அப்படியொன்றும் பரிசுத்தமானவர் அல்ல என்பதை உலகறியும். ஆனால் உலகமெங்குமே புட்டோ விஷயத்தில் மட்டுமின்றிப் பொதுவாகவே மரணதண்டனைக்கு எதிராக அபிப்பிராயம் வலுத்து வருகிறது. பாகிஸ்தான் சுப்ரீம் கோர்ட்டின் தீர்ப்பு ஏகமனதானது அல்ல என்கிற நிலையில் புட்டோவுக்குக் கருணை காட்டி பாக் அதிபர் ஜியா தண்டனையைக் குறைக்கலாம் என்று உலக நாடுகள் பலவும் கருத்துத் தெரிவித்துள்ளன.

இந்நிலையில் பாக் அதிபர் ஜியா ஒரு தர்மசங்கடமான நிலையைத் தமக்குத் தாமே தோற்றுவித்துக் கொண்டுள்ளார். 'பாகிஸ்தானின் உள்நாட்டு விவகாரம் இது. அந்நியர் தலையீடு வேண்டாம்' என்றும் 'சட்டத்தின் ஆட்சியை நிலைநிறுத்துவோம்' என்றும் வீராப்புடன் பேசியுள்ளார்.

மரணதண்டனை நிறைவேறினால் அவர் உலக நாடுகளின் கண்டனத்துக்கு ஆளாவது மட்டுமின்றி பாகிஸ்தானுக்குள்ளேயே புட்டோ ஆதரவாளர்களுக்குப் புது பலம் கொடுத்தவராவார்.

பாக் அதிபர் ஜியா இத்தகைய வெறித் தனத்தை வெளிப்படுத்த மாட்டார் என நம்புகிறோம்.

## நெறி

அரசு ஏற்படுத்தும் சட்டங்களையும் வழிமுறைகளையும் மந்திரிகளே மீறுவது என்பது வருந்தத்தக்கது.

ராஜாஜி முதல்வராக இருந்தபோது ஒரு போலீஸ்காரர், அவருடைய காரோட்டி ஏதோ ஒரு தவறு செய்து விட்டார் என்று கேஸ் எழுதி விட்டார். இதற்காக ராஜாஜி வருத்தமோ கோபமோ அடையவில்லை. மாறாக அந்தப் போலீஸ்காரரைப் பாராட்டினார்.

இத்துடன், அமைச்சர் ஃபெர்னாண்டஸ் அண்மையில் சென்னை விமான நிலையத்தில் நடந்து கொண்ட விதத்தை ஒப்பிட்டுப் பாருங்கள். பாதுகாப்புச் சோதனைக்குத் தாம் உட்பட முடியாது என்று பிடிவாதம் பிடித்திருக்கிறார். இது அமைச்சர்களையே அவமானப்படுத்துவதாகும் என்று பர்னாண்டஸ் கருதினால், அமைச்சர்களுக்குப் பாதுகாப்புச் சோதனை கிடையாது என்று அரசு உத்தரவை மாற்றி அமைக்க அவர் முதலில் முயற்சி மேற்கொள்ள வேண்டுமேயன்றி இருக்கிற விதிமுறைகளை மீறுவேன் என்று கூறி நடந்து கொள்வது நல்லதொரு முன் உதாரணம் அல்ல. அப்புறம் மக்களுக்கு மந்திரிகளிடமும் மதிப்பிராது. சட்டத்தையும் மதிக்க மாட்டார்கள்!

## பொறி

ஆந்திர மாநில சட்டசபையில் ஆளுநர் தமது சொற்பொழிவை நிகழ்த்த முடியாமல், ஜனதா, காங்கிரஸ், கம்யூனிஸ்டு எதிர்க் கட்சிகளைச் சேர்ந்த அங்கத்தினர்கள் இடையூறு விளைவித்துள்ளனர். ஆளுனர் பேச எழுந்த போது கூடவே இவர்களும் எழுந்து தாங்கள் தயாரித்து வைத்திருந்த சொற்பொழிவைப் படிக்க ஆரம்பித்தார்கள்.

முதலமைச்சர் சென்னா ரெட்டியின் சஷ்டியப்தபூர்த்தி விழா மிக ஆடம்பரமான முறையில் கொண்டாடப்பட்டதையும் இதையொட்டி மாநிலத்தின் மூலைமுடுக்குகளிலெல்லாம் கூட ஏராளமான பணம் வற்புறுத்தி வசூலிக்கப் பட்டதையும் இதற்கு அரசாங்க யந்திரம் தாராளமாகப் பயன்படுத்தப்பட்டதையும் கண்டித்தே முக்கியமாக எதிர்க்கட்சியினர் இப்படி நடந்து கொண்டனர்.

நெருப்பில்லாமல் புகையாது என்பார்கள்; இவ்விஷயத்தில் புகை மட்டுமல்ல, பொறிகளையே கூடக் காண்கிறோம்.

ப.நீலகண்டன் பேட்டி

# திருப்பம் ஏற்படுத்திய "திருடாதே"!


ப. நீலகண்டன்

டெலிபோன் எண்களைச் சுழற்றினேன். மறுமுனையில் கரகரத்த ஒரு குரல் கேட்டது. ''வணக்கம்'' என்றார் இயக்குனர் திரு. ப. நீலகண்டன்.

''நீங்கள் பல படங்களை இயக்கியிருக்கிறீர்கள். அதிலே உங்களுக்கு மிகவும் பிடித்தமான படம் எது?''

''திருடாதே.''

இப்படி அவர் சொன்னவுடன் என் நினைவு பின்னோக்கிச் சென்றது. ஆனந்த விகடனில் மாண்புமிகு முதல்வர் திரு எம். ஜி. ஆர். ''நான் ஏன் பிறந்தேன்'' என்ற கட்டுரைத் தொடரில் ''ஆறுவது திருப்பம்'' என்று குறிப்பிட்டு எழுதுகிறார்: ''எனது இடது கால் முறிந்த பின் வெளிவந்த சமூகப் படம் வெற்றி பெறுவது மட்டுமின்றிச் சமூகப்படங்களுக்கு நான் பொருத்தமற்றவன் போலும் என்ற சந்தேகம் எனது நண்பர்களுக்குக்கூட ஏற்பட்டது போன்ற நிலை உருவாக்கப் பட்டிருந்த நேரத்தில் இந்தப் படம் வெளிவந்தது. மிகப்பெரிய வெற்றியும் பெற்றது.''

திருடாதே படத்தைப் பற்றி எம். ஜி. ஆர்., நீலகண்டன் ஆகிய இருவருக்குமே எவ்வளவு கருத்து ஒற்றுமை என்று நினைத்துக்கொண்டே நீலகண்டன் சொன்ன நேரத்திற்குப் பேட்டி காண அவர் வீடு சென்றேன்.

''உங்களுக்குத் ''திருடாதே'' படம் பிடித்ததற்கான காரணம்?''

''ஒரு திரைப்படத்தின் லட்சியம் உற்சாகத்தைத் தருவது, வாழ்க்கையோடு போராடும் வல்லமையை ஏற்படுத்துவது, தன்னம்பிக்கையை ஊட்டுவது, நமக்கும் வாழ்வு உண்டு என்று ஏழையை நம்பச் செய்வது. இந்தப் படத்தில் Messageம் இருக்கிறது. Entertainmentம் இருக்கிறது; ஒரு காலத்தில் 'Messageவேண்டுமா தபாலாபீஸுக்குப் போ' என்று சொன்னது உண்டு. ஆனால் 1930ம் ஆண்டுக்குப் பிறகு உலக சினிமா அரங்கில் Message இருக்கும் படம்தான் படம் என்று ஆகிவிட்டது. அப்படிப் பார்க்கப் போனால் இப்படத்தில் நான் சற்றுமுன் கூறிய எல்லாமே இருக்கின்றன. A film must be National in character and international in appeal. இப்படத்தில் அருவருப்பான செக்ஸ் கிடையாது. படம் ஆரம்பித்ததற்கும் வெளியிட்டதற்கும் இடையில் சில வருடங்கள் ஆகிவிட்டன, பல காரணங்களால். ஆனால் படப்பிடிப்பு நடந்த நேரமும் தயாரிப்புச் செலவும் மிக மிகக் குறைவு. இது ஒரு Box office hit. இங்கு மட்டுமல்ல; சிலோனில் Central Talkiesல் மூன்று முறை வெளியிட்டார்கள். மூன்று முறையும் 100 நாள் ஓடியது!''

''இந்தப் படத்தின் Message...?''

''தலைப்பே கூறி விடுகிறதே. ''திருடாதே!'' இந்தப் படத்திற்குச் சிறப்பாகப் பெயர் அமைந்தது போல் வேறு பல படங்களுக்கு அமைந்திருக்குமா என்பது சந்தேகம்



✖ திருடாதே படத்தில் எம்ஜியார், சரோஜாதேவி நம்பியார், தங்கவேலு

தான். சிலர் அழகான பெயர் என்பதால் வைப்பார்கள். பலபேர் ஒரு பாட்டின் பல்லவியைப் படத்தின் பெயராக வைப்பார்கள். சிலர் நியூமராலஜி பிரகாரம் வைப்பார்கள். இப்படத்தில், மறைந்த பட்டுக் கோட்டை கல்யாணசுந்தரம் படத்தின் தலைப்பிற்கேற்றபடி ''திருடாதே, தம்பி திருடாதே'' என்று பாட்டு எழுதியது மேலும் சிறப்பைத் தந்தது.''

''உங்கள் படத்தின் கதாநாயகன் நல்லவனாகத்தான் இருக்க வேண்டுமா?''

''தமிழ்ப் படவுலகில் ஒரு படத்தின் கதாநாயகன் யார் என்பது இன்னும் பலருக்குப் புரியாத புதிராகத்தான் இருக்கிறது. மனிதனை, மனித சமுதாயத்தைப் புரிந்து கொள்பவன் எவனோ அவன்தான் கதாநாயகன்.

''ஒரு பெரிய பணக்காரனின் மகள், ஏழையை மணக்கிறாள் என்ற கதை ஏழை மக்களுக்கே மகிழ்ச்சியை அளிக்கும் அல்லவா? அந்த ஏழை நல்லவன் என்று படத்தில் காட்டுவது தவறான வழிகளில் ஏழைகள் செல்ல மாட்டார்கள் என்ற எண்ணத்தை அவர்களது நெஞ்சில் பதிக்கும் அல்லவா? எம். ஜி. ஆர். இந்தப் படத்தில் மட்டுமல்ல; வேறு எத்தனையோ படங்களில் ஏழைத் தொழிலாளியாக, விவசாயியாக, உண்மைக்குப் பாடுபடுகிறவனாக நடித்து உழைக்கும் மக்களுக்கு உயர்வு தருகிறார். அவர்களுடைய உள்ளத்துக்கு உரமேற்றுகிறார்.''

'' ''திருடாதே'' படத்தில் உணர்ச்சிப் பெருக்கான காட்சிகள், காதல் காட்சிகள் குறைவாக இருப்பதாக நீங்கள் பாதிப்படத்தில் சொன்னீர்களாமே?''

''ஆமாம். அப்படித்தான் நினைத்தேன். ஆனால் எனது தயாரிப்பாளர்களோ மாற்றங்களை விரும்பவில்லை. இந்தச் சமயத்தில் நான் மதிப்பிற்குரிய எம். ஜி. ஆர். உதவியை நாடினேன். என்னுடைய தேவைகளை ஏற்றுக் கொண்ட அவர் தாமே கற்பனை செய்து காட்சிகளை அமைத்துக் கொடுத்தார். இந்தப் படத்தின் வெற்றிக்கு மூலகாரணம் அவர் தான்.

''உலகத் திரைப்பட அரங்கில் The name above the Title என்ற பெயரை முதலில் பெற்றவர் Frank Capra என்பவர் தான். இது போன்று முதன் முதலில் தமிழில் Man above the title ஆக இருப்பவர் திரு. எம். ஜி. ஆர். தான். படத்தின் பெயருக்கு முன் ''எம். ஜி. ஆர். வழங்கும்'' என்று போடுவதில் தயாரிப்பாளர்கள் மிகவும் பெருமைப்படுகிறார்கள்.''

''இப்படத்தின் கிளைமாக்ஸ் காட்சி பற்றி...?''

''அறையில் ஒரு சிறு விளக்கு. அதைத் தட்டிவிட்டதின் விளைவு, அங்குமிங்கும் அலை பாய்ந்து கொண்டிருக்கிறது. வில்லன் கையில் ரிவால்வர் இருக்கிறது. கதாநாயகனை எந்த நேரத்திலும் சுட்டு விடு



வான் என்ற பரபரப்பு மிகுந்த கட்டம். தமிழ்ப்படச் சரித்திரத்தில் முதன்முறையாக இந்த மாதிரி ஒரு காட்சி அமைந்தது இந்தப் படத்தில்தான். அதற்குப் பிறகு வந்த பல படங்களில் கிளைமாக்ஸ் காட்சிகள் இதையே பல வகையில் ''தழுவி'' இருந்தன.''

''திரைப்படத் துறையின் எதிர்காலம் பற்றி உங்கள் கருத்து என்ன?''

''250 பக்கத்தில் விளக்க முடியாத விஷயத்தை இரண்டு நிமிடத்தில் ஒரு திரைப் படத்தின் மூலம் தெளிவாக விளக்கி விடலாம். இன்னும் சில வருடங்களில் பாடப் புத்தகங்கள் இடத்தில் சினிமா உட்காரப் போகிறது. உலக அரங்கில் சினிமாவுக்கு ஒரு Intellectual status கொடுத்திருக்கிறார்கள். பல கல்லூரிகளில் திரைப்படக் கலையைப் பாடமாக வைத்திருக்கிறார்கள். இங்கேயும் திரைப் படக் கலையைப் போதிப்பதுடன் திரைப்படத் திறனாய்வுக்கும் வழி ஏற்பட வேண்டும் என்பது என்னுடைய ஆசை. படங்களின் தரம் உயர இது துணை புரியும். "Good citizens"—"Good pictures".

பேட்டி: சலன்

# உங்கள் உத்தம நண்பன்



லக்ஷ்மி விலாஸ் பாங்கின் தொடர்பு என்றாலே உங்கள் வருங்கால வாழ்க்கைக்கு ஒரு மாபெரும் ஊக்கம். எங்களது வாடிக்கையாளர் என்றாலே தங்கள் வாழ்வில் ஒரு ராஜ பாதை திறக்கின்றது என்று பொருள்.

50 ஆண்டுகளாக எங்கள் பணிபெற்று மகோன்னத திசையில் மகிழ்ச்சியாக வாழும் பலர் உள்ளனர். நீங்களும் ஏன் அவர்களில் ஒருவராகக் கூடாது?

எங்கள் பணி பெற்று லக்ஷ்மி கடாக்ஷம் பெற உங்களை வரவேற்கின்றோம்.

உங்கள் வியாபார வசதிக்கும் குடும்ப தேவைக்கும் நாங்கள் பொறுப்பு ஏற்கின்றோம். இது நாள் வரை சேமிக்காவிடினும் இன்றே, இப்போதே ஒரு சிறிய தொகையைக் கட்டி கணக்கைத் தொடங்குங்கள். நீங்கள் பெருந்தனம் பெற நாங்கள் உங்கள் உத்தம நண்பனாகி வழி காட்டுகின்றோம்.




## லக்ஷ்மி விலாஸ் பாங்க் லிமிடெட்

பதிவு அலுவலகம் : கரூர்-639 001

நிர்வாக அலுவலகம் : சென்னை-600 086.

மணி ஆலை
ஜெனரல் மானேஜர்

என்.வி. ஸ்ரீநிவாசன்
சேர்மன்

SUSAK/LVB/513

# பாட்டிமார்களும் பேத்திமார்களும்

## ஜெயகாந்தன்

### 5. தாயும் மகனுமானனும்...

கோதை வீட்டிலிருந்து வெளியே வந்ததும் எதிர்வீட்டிலிருந்தும் பக்கத்து வீடுகளிலிருந்தும் அவளைப் பார்ப்பதற்காகப் பெண்களும் குழந்தைகளும் வந்து நின்றனர். ஒரு புன்முறுவலுடன், குறிப்பாக இன்னாரென்று எவரையும் பார்க்காமல் அந்தத் தெருவிலிருக்கும் முகமறியாப் பெண்களையும் குழந்தைகளையும் பொதுவாகப் பார்த்துத் தலையசைத்தாள் கோதை.

சாமியார் குழந்தைகளை ஏற்றிக்கொண்டு விரைந்து செலுத்திய வில்வண்டி தெருக்கோடிப் புழுதியில் திரும்பி மறைந்தது... புழுதிப் படலம் மட்டும், சற்றுநேரம் தெரிந்தது. அடுத்த தெருவில் வண்டி திரும்பிய பின்னரும் கூடக் காளைகளின் கழுத்துச் சலங்கையொலி கேட்டவாறு இருந்தது.

கோதை தெருவில் இறங்கி நடந்தாள். அவள் பின்னால் வேலைக்காரன் முருகேசன் பணிவோடு கைகட்டிக் கொண்டு போனான். இந்தப் புது வீட்டுக்குப் பொறுப்பாக அவனும் அவன் மனைவி செங்கேணியும் பின்கட்டில் வந்து குடியேறினார்கள். சமையல் வேலை, வீட்டைப் பார்த்துக் கொள்வது, வேலைக்காரர்களை மேய்ப்பது ஆகிய பணிகள் அவர்களுடையது என்று திட்டங்களை ஏற்கெனவே முருகேசன் தம்பதிகளிடம் சொல்லியிருந்தாள் கோதை. வீடு நிறைய, வேலைக்காரர்கள் என்ற பேரில் மகுடேசன் பிள்ளையின் சுற்றத்தாரே குழுமியிருந்தனர். பழைய வீட்டில் இருந்தது போலில்லாமல் இங்கு, கோதையிடம் பயமும் பணிவும் கொண்டு அவர்கள் மிகுந்த பொறுப்புடன் இருப்பவர்களாய்த் தோன்றினார்கள். எஜமானர்களைப் பொறுத்தே பணியாட்கள் அமைவார்கள் — அந்த வீட்டில் இந்த வேலைக்காரர்கள் பொறுப்பற்றிருந்ததற்குக் காரணம் அந்தக் குடும்பத்தில் உண்மையாகவே பொறுப்பேற்றுக் கொள்ளவும், குடும்ப நலனில் அக்கறை காட்டவும் உரிமை மிகுந்த எஜமானர்கள் யாருமே இல்லாததுதான் என்று அறிந்திருந்த கோதை, இங்கு அந்தக் குறையே இல்லாமல், குடும்பத்தையும் நிலபுலன்களையும் எப்படிப் பாதுகாப்பது என்பதற்குத் தானொரு முன்மாதிரியாக இருந்து இவர்களுக்குக் கற்றுத்தரத் தீர்மானித்திருந்தாள்.

மகுடேசன் பிள்ளை மறைவுக்குப் பிறகு, சொத்துக்கள் பாகம் பிரிந்திருந்தும், அதன் விவரம் அவர் எழுதிய உயிலில் தானிருந்ததே தவிர நடைமுறையில் எல்லாம் எப்போதும் போலவே நிர்வாகம் நடந்து கொண்டிருந்தது.

மகுடேசன் பிள்ளையின் ஐந்தாவது பெண் மகாராணியின் புருஷன் மாணிக்கம்தான் வீட்டுக் கணக்குப் பிள்ளை மாதிரியும், வீட்டு மனிதர்கள் இல்லாதபோது பிறர் முன்னிலையில் இவ்வளவு ஆஸ்திகளுக்கும் தானே ஏகச்சக்ராதிபதி போலவும் பொறுப்போடும் ஆடம்பரத்தோடும் அதிகாரம் பண்ணிக் கொண்டு திரிகிறான்...

கோதையும் முருகேசனும் இந்தப் புது வீடு இருக்கும் தெருவைத் தாண்டி, முன்பிருந்த மகுடேசன் பிள்ளை வீட்டுத் தெரு முனையைக் கடந்து தோப்புக்குப் போகும் பாதை முனையில் வந்து நின்றனர். தான் புது மணப்பெண்ணாக மகுடேசன் பிள்ளையுடன் வந்து புகுந்த அந்த வீட்டைத் தூரத்திலிருந்து அவள் பார்த்த நேரத்தில் குறட்டில்





கூட்டத்தில் ஒருவர் மற்றொருவரிடம்: பேசுபவர் புலியாட்டக்காரராயிருந்து அரசியலுக்கு வந்தவர். பாஞ்சு பாஞ்சு பேசுவார். அதனாலே மைக்குகளை இப்படி அரேஞ்சு பண்ணியிருக்காங்க.

கே. எஸ். எஸ்.

உலாவிக் கொண்டிருந்த பெரியசாமியும் இவர்களைத் திரும்பிப் பார்த்தான்.

''பெரியவர் நிக்கிறாரு'' என்று மரியாதை கலந்த பயத்துடன் முனகியவாறு கோதையின் பின்னால் மறைந்தான் முருகேசன்.

'பெரியவராயிருந்தால் என்ன, சின்னவராயிருந்தால் என்ன? எனக்கு மகன்தானே?' என்ற தோரணையில் தலைநிமிர்ந்து பெரிய வீட்டைப் பார்த்தாள் கோதை.

பெரியசாமி கோதையை இதுவரை நேருக்கு நேர் பார்த்ததே இல்லை. யாரோ புதிய மனுஷியாக இருக்கிறாளே என்றுதான் ஓர் ஆர்வத்தில் இவளைப் பார்த்தான் பெரியசாமி. அவளுக்குப் பின்னால் வந்த முருகேசனையும், அவள் கையில் சுமந்த சாவிக் கொத்தையும், அவள் தன்னைப் பார்த்த தோரணையிலும் 'இவள் நம் சின்னம்மாள் அல்லவோ' என்று நினைவு படுத்திக் கொண்டு 'வா சின்னம்மா' என்று மரியாதையுடன் அழைத்தவாறு இவர்களை எதிர்கொண்டு வந்தான் பெரியசாமி.

பெரியசாமி தன்னை விடப் பத்து வயது மூத்தவன் என்ற நினைவும் அவளுக்கு வந்தது. முப்பது வயதுக்குள் இவன் எவ்வளவு கெட்ட பேருக்கு ஆளாகித் தகப்பனின் வெறுப்புக்குப்பாத்திரமானவன் என்ற விஷயங்களையெல்லாம் கோதை கேள்விப்பட்டிருந்தாள். தனது பெரிய மகனைப் பற்றி மருதேசன் பிள்ளை உயிலில் எழுதியிருந்த வாசகங்களை இப்போது ஒருமுறை நோக்கி மீண்டும் எண்ணிப் பார்த்தாள்: ''என் மூத்த மகன் பெரியசாமிப் பிள்ளை என் விருப்பத்துக்கு விரோதமாகவும், குடும்பத்தின் நற்பெயருக்குக் களங்கம் ஏற்படுத்துகிற விதமாகவும் ஸ்திரீலோலனாகி விட்டபடியாலும்.''

''வா, சின்னம்மா... தனியா எங்கே புறப்பட்டே?... சிங்காரம் பள்ளிக்கூடம் போயிட்டானா?... சாமியார் எங்கே?'' என்று சின்னம்மா என்கிற அன்பும் மரியாதையும் குழைய, தன் வயதுக்கு இளையவளான கோதையை விசாரித்தான்.

''தோப்பு வரைக்கும் போயிப் பார்த்துட்டு வரணும்... முன்னே இருந்த மாதிரி நமக் கென்னன்னு இந்தச் சொத்துக்கு உடையவங்க இனிமே இருந்தால் — அது நல்லதுக் கில்லே... அவுங்க அவுங்க பொறுப்புக்களை அறகா எல்லாரும் செய்து சொத்துக்களைக் காபந்து பண்ணணும் — தேங்காய்க் கிடங்கு என் பங்கிலே வந்திருக்கு — தோப்பும், கெடங்கும்தான் அவுங்க இருந்து நேரிடையா கவனிச்சுக்கிட்டது. மாணிக்கம்பிள்ளை என்ன பண்ணி வெச்சிருக்காரோ?'' என்று பேசிக் கொண்டே நடந்த கோதையின் பக்கத்தில்



சற்றுத் தள்ளிப் பெரியசாமியும், அவர்களின் பின்னால் கைகளைக் கோத்து மார்பின் மேல் கட்டியபடி முருகேசனும் நடந்து கொண்டிருந்தார்கள்.

தன் தங்கை மகாராணியின் புருஷன் மாணிக்கம்பிள்ளை இவனுக்கு உறவுக் காரன் என்னும் விஷயத்தை நினைத்துக் கொண்டே பெரியசாமி ''மாணிக்கம்பிள்ளை அதையெல்லாம் பொறுப்பாகக் கவனிச்சுக்கிட்டுத் தானே வரான்'' என்றான்.

''அதெல்லாம் சரியாத்தான் நடக்கும். ஆனாலும் நம்ப மேற்பார்வை இருந்தால் தான் சரிப்பட்டு வரும்னு அப்பா சொல்லுவாங்க... அவங்க ஸ்தானத்திலே இப்ப யாராவது இருந்து மேற்பார்வை செய்யணும்... தாயும் மகனுமானாலும் வாயும் வயிறும் வேறேதானே அப்பா...'' என்று சொல்லிக் கொண்டே மூவரும் வாய்க்காலின் மேல் குறுக்காகப் போட்டிருந்த தென்னை மரப்பாலத்தை ஏறிக் கடந்தனர்...

இங்கிருந்து பார்க்கும்போது நேர் எதிரே பழைய வீட்டின் புழக்கடைப் பகுதி தெரிந்தது. தோட்டத்து வாசற்படியில் இடுப்பில் வைத்தியைத் தூக்கிக் கொண்டு காந்திமதி நின்றிருந்தாள்.

''அடியே! பொன்னம்மா, ராணி, சிவகாமி இங்கே ஓடியாங்களேன்... கப்பல்காரி வரா.. அவள் வாரதைப் பாரேன்... பெரிய விக்டோரியா மகாராணின்னு அவளுக்கு நினைப்பு... இந்த முருகேசனைப் பாரேன். ... அடைப்பக்காரன் மாதிரி கூனிக் குறுகிக்கிட்டு அவ பின்னாலே போறான்... அடியே! மங்களம்... பின்னாலே அண்ணாத்தைக்கூடப் போறாரு... என்னபோ விசேஷமாத்தான் இருக்கும்'' என்று தன் ஆர்வத்தை அடக்க முடியாமல் இடுப்பில் குழந்தையுடன் ஒரு தாவுத் தாவி வாய்க்கால் பாலத்தைக் கடந்து தோப்பை நோக்கிப் பறந்து வந்தாள் காந்திமதி. அவள் குரல் கேட்டு ஓடிவந்த மற்றப் பெண்கள் சற்று



நேரத்துக்கு முன்னால் காந்திமதி நின்றிருந்த தோட்டத்து வாசற்படியில் அடைத்துக் கொண்டு அதற்குமேல் வெளியே வர உத்தரவில்லாதவர்கள் போல் நின்றனர்.

காந்திமதி இவர்களை நோக்கித் தூரத்தில் வந்து கொண்டிருப்பதைப் பார்த்த கோதை பெரியசாமியிடம் சொன்னாள்: ''உங்க அப்பா இவ்வளவு சீக்கிரம் நம்மை விட்டுட்டுப் போனதுக்கு இந்த வீட்டுப் பெண்கள் அசைவம் சாப்பிடறதுதான் காரணம். ஆனா அவர் அநியாயமா என்னைச் சந்தேகப் பட்டார். அதனாலேயே அன்னத் துவேஷம் வந்து போய்ட்டார்... இதெல்லாம் உனக்குத் தெரியுமா?''

''தெரியும்'' என்று சொல்லிக் கொண்டே தலைநிமிர்ந்த பெரியசாமி இவ்வளவுக்கும் காரணமான தங்கை காந்திமதி, வந்து கொண்டிருப்பதைப் பார்த்து மேற்கொண்டு அந்த விஷயத்தைத் தொடராமல் வாயை மூடிக் கொண்டான்.

# திண்டல் கிட்டா!










குடித்திருப்பவரை கண்டுபிடிக்க பஸரின்!
— செப்ஸி

பெரியசாமிக்கு இந்த வீட்டுப்பெண்கள் அப்பாவுக்குத் தெரியாமல் அடித்த, அடிக்கிற கூத்துக்களெல்லாம் தெரியும். அதையெல்லாம் ஆண் பிள்ளைகள் கண்டு கொள்ளக் கூடாது; நம்முடைய மரியாதைதான் அதனால் கெட்டுப் போகும் என்ற எண்ணமுடையவன் பெரியசாமி.

''அதெல்லாம் அம்மா உயிரோடிருந்த காலத்திலேயிருந்து நடக்கறதுதான். அம்மா தன் சாமர்த்தியத்தினாலே அப்பாவுக்கு அந்தச் சமாசாரமெல்லாம் தெரியாமல் காப்பாத்தி வந்தாங்க... அப்புறம் அது தெரிஞ்சு போச்சு போல இருக்கு அப்பாவுக்கு... அதுக்காக உன்னை ஏன் சின்னம்மா அவரு சந்தேகப்படணும்? என்னைக் கேட்டா யாரும் எக்கேடும் கெட்டும்னு விட்டுட வேண்டியதுதான்! இதுக்காக மனுஷருக்கு அன்னத்துவேஷம் வந்ததும், அவர் அப்படியே செத்துப் போனதும் நம்ப முடியாத அதிசயமாக இருக்கு... அப்பா ரொம்ப மூர்க்கமானவர்... இப்ப நான் வந்து இந்த வீட்டோட இருக்கறது அவருக்குப் பிடிக்காத காரியம்தான்... நீ கூட அதனாலேதான் சிங்காரத்தைக் கூட்டிக்கினு வேற குடித்தனம் போயிட்டதா மங்களம் சொன்னாள்... அப்படின்னா அப்பா இருந்தப்ப செய்த மாதிரி, நானும் மங்களமும் பழனியாண்டவர் கோயில் வீட்டுக்கே போயிடறோம். இங்கேயே நீ வந்துடு சின்னம்மா'' என்றான் பெரியசாமி.

'ம்... உனக்கென்ன? எந்த வீட்டிலிருந்தாலும் அந்தத் தாசி வீடே கதின்னு விழுந்து கெடக்கிறவன் தானே, நீ? பாவம் அந்த மங்களம் பொண்ணு இப்ப பிள்ளைத் தாய்ச்சியாக வேறு இருக்கிறாள்...' என்று மனத்துள் நினைத்த கோதை பெரியசாமியைப் பார்க்காமல் அப்போதுதான் அங்கு வந்த காந்திமதியைப் பார்த்தவாறு சொன்னாள்: ''நான் எப்படி இருக்கணும்னு — அவருக்கு அப்புறம் நான் என்னென்ன செய்யணும்னு உங்க அப்பா விரும்பினாரோ அதன்படி நான் இருக்கேன். மத்தபடி இதெல்லாம் உங்க வீடு; குடும்பம் — நீங்க எல்லாரும் ஒண்ணாயிருக்கிறதுதான் எல்லாருக்கும் நல்லது'' என்றாள் கோதை.

'இவ்வளவு நியாயம் பேசுகிற நீ மட்டும் தனியாப் போயிட்டியே' என்று கேட்டுவிட நினைத்த காந்திமதி வாயில் வந்த வார்த்தையை அடக்கிக் கொண்டாள்.

''சிங்காரம் ஒழுங்கா பள்ளிக்கூடம் போறான் இல்லே?... அடுத்த வருஷம் இந்த வைத்தியையும் பள்ளிக் கூடத்திலே போட வேண்டியதுதான். வயசு ஆறு ஆகுது இடுப்பை விட்டு இறங்காத பச்சைக் குழந்தையாகவே இருக்கியே...'' என்று அலுத்துக் கொண்டு அவனைக் கீழே இறக்கி விட்டாள்.

அப்போது இரண்டு மூன்று வண்டிகளில் அம்பாரம் அம்பாரமாய்த் தேங்காய்களை ஏற்றிக்கொண்டு, வாடிக்கைக் காரர்களிடம் வியாபாரம் பேசிக் கொண்டிருந்த மாணிக்கத்தை நெருங்கி வந்தாள் கோதை. அவன் கையிலிருந்த கணக்கு நோட்டுப் புத்தகத்தை அவனிடம் கையை மட்டும் நீட்டிக் கேட்டாள். (தொடரும்)




ஆண்டவன் அடியிணை அண்டையில் ஒளிரும்
அகண்ட விளக்(கு) அவன் அமுத நாமமே!
விளக்கினில் வார்த்தேன் துயர்வதை
எண்ணெய்;
விள்ளரு ஞான தேஜோமய மாச்சு!
ஓட்டமிட்ட(து) ஓயாத மரணபயம்.
வாட்டமற வழி கேளீர், கேளீர்;
சடங்கினில் பொழுதினை வீணிட வேண்டா;
கிடங்கு மரத்தையோர் சுடர்ப்பொறி போலே
திவ்விய நாமத் திகழொளியே நுமை
வல்விய பாபம் வறுத்து நீறுக்கும்

[மஹான்களின் அணித்தே உள்ளவர்கள் அவர்களது பெருமையறிந்து பயனடையாம லிருக்க, எங்கிருந்தோ வருவோர் இச் சிறப் பறிந்து தாங்களும் சிறப்பதை எண்ணி குருநானக் பாடியது:]

அமுதத் தெளிவாம் அழகுப் பொய்கையைக்
குமுதத் தாமலர் கொண்டது குடியாய்;
பாசி படர்ந்தது. சேறு செறிந்தது.
தூசிலாமலே திகழ்ந்தது தேமலர்.

தவளைப் பிள்ளாய்! தனியால் நனைந்த இக்
குவளையின் அணிமை நீ அறிய லில்லாயே!
நிர்மலப் புழலதில் நீ பிறந்தாலும்
துர்மலப் புழுதியை, பாசியைப் புசிப்பாய்.

இம்மடு பிறவா அந்நியத் தேனி
செம்மலர் சேருது; மடுக்குது மதுவை.

அழுக்கு இழுக்கறு அழகுகொள் குமுது
சழக்கற அன்(பு) அநுபூதி கண்டதால்
எட்டா விண்ணகத்(து) எழும்ப வாண்மதி
பட்டாய் மலர்ந்ததைப் பணியுது இன்பாய்!

நீல விசும்பென்னும் நீளத் தகட்டில்உன்
கோல விளக்காம் பரிதியும் மதியமும்;
காணிக்கையாகவே கணக்கில தாரகை
ஆணி முத்தம்போல் அணிஅணி தோன்றுது;
சந்தன கானகம் கந்தோபசாரம்,
மந்த மாருதம் உன் சொந்த சாமரம்;
நித்திய ஜோதி! நின் அர்ச்சனையாக
எத்திசையிலும் வனம் வழங்குது மணமலர்.

ஆயிரமாயிரம் ஆகும் உன் நயனம்,
ஆயினும் நேத்திரம் ஒன்றுமில்லாதவன்;
ஆயிரமாயிரம் ஆகும் உன் உருவம்,
ஆயினும் ஒருரு அற்றவன், அருவன்;
ஆயிரமாயிரம் ஆகும் உன் அடிமலர்
ஆயினும் ஒருகால், ஒருகாலும் அற்றவன்;
ஆயிரமாயிரம் ஆகும் உன் நாசிகை,
ஆயினும் நாசியில்லாத் தனிநாயகன்;
உன்திறன் காட்டு இந்திரஜாலம்
மந்திர மாயமே, மதியை மயக்குதே!

எவ்வெவ்விதயமும் ஏக ஜோதியாய்
செவ்விதின் இலகுது இறையவன் ஒளியே.
அனைத்துலகுக்கும் அகண்ட தீபம்
அனையா அறிவினை, உயிரினை ஊட்டுது.
தேசாய் உள்ளே ஒளிந்த ஒளியது
ஆசான் சொல்லில் உணர்வாய் மிளிருது.
இந்தவா(று) இதய தீபம் சேர்வதை
எந்தை உவந்திடும் எழில் ஆரத்தி.

கள்ளவிழ் மலர்க்கு மதுகரமெனவே
ஒள்ளிய திருவடிக்(கு) ஏங்கினேன் இறைவா!
அல்லென பகலென அநுதினம் அடியேன்
அல்லலுற்றேன் அன்பு தாக வேகத்தில்.
தாகத் தவிப்பிலும் தரணி நீரன்றி
மேக மழையதே நாடு சாதகமாய்
நானகன், நாத! நின் ஆரருள் நீரே
பானகம் கொள்வேன்; பரிந்து வழங்காய்!
நாமம் நல்கும் நய ஒளிதன்னில்
சேமமாகக் கண்சோர அருள்வாய்!

(தமிழாக்கம்: ரா. கணபதி).

## அத்தியாயம் 15

அன்று மாலை வைத்திலிங்கம் வீடு திரும்பியதும் அவருக்கு யோகேஷ் வீட்டில் நடந்ததையெல்லாம் ஒன்று பாக்கி விடாமல் கலோசனுவும் தனபாக்கியமும் மாறி மாறிக் கூறினர்கள். கேட்டவரும் சரி, கூறியவர்களும் சரி கண்களில் நீர் ததும்புகிற அளவுக்கு அடக்கமாட்டாமல் சிரித்து மகிழ்ந்தார்கள். அது தவிர வீட்டிலே கல்யாணம் வரப் போகிறது என்ற எண்ணமே அவர்களை ஆனந்தத்தில் மகிழச் செய்தது. ''சத்யா எங்கே? ஐ மஸ்ட் கன்கிராஜுலேட் ஹிம்'' என்றார் வைத்திலிங்கம்.

''அவன் இன்னும் வீடு திரும்பலே'' என்றாள் தனபாக்கியம். ''வர நேரம்தான்.''

''இப்போ எங்கேம்மா வரப் போகிறான் அண்ணா? நீதான் காரியம் வெற்றிகரமாய் முடிஞ்சதுன்னு அவனுக்கு ஃபோன் பண்ணிச் சொல்லிட்டயே, அந்த சந்தோஷத்தில் அவன் தன் நண்பன் யாருடனாவது ஹோட்டல், சினிமான்னு போயிட்டுத்தான் வருவான். ஒருவேளை பிங்கியையே கூடப் பார்க்கப் போயிருக்கலாம்.''

''ஏங்க, நான் கேட்கறேன்னு கோபிக்காதீங்க'' என்று ஆரம்பித்தாள் தனபாக்கியம். ''அவனுக்கோ கல்யாணம் கூடப் பேசியாச்சு. இன்னும் நூற்றுச் சொச்சம் சம்பளத்தில் வைச்சிருந்தால் எப்படி...?''

''கம்பெனியே அவனுடையதுதானே பாக்கியம்? அப்பா — பின்னே இரண்டு பேரும் பெரும் தொகையா கம்பெனியிலேயிருந்து எடுத்துக்க வேண்டாம், அனுவசியப் பேச்சும் பொறுமையும் எழும்னு நினைச்சேன். இப்பத்தான் அவன் அருள்ராஜிட்டே நல்லா டிரெய்னிங் ஆயிட்டானே, நான் விலகிக்கிட்டு அவனை உயர்ந்த பதவியிலே வைக்க என் சம்பளத்தை அவனுக்குப் போட்டுக் கொடுத்துட வேண்டியதுதான். சும்மா 'அட்வைஸர்' என்கிற முறையிலே அப்பப்போ யோசனை சொல்ல ஆபீஸுக்கு நான் போயிட்டு வரேன். இப்ப அவன் வாங்கற சம்பளத்தை இனிமேல் நான் எடுத்துக்கறேன், சரிதானே?''

# மும்முனைகள்

கி.ராஜேந்திரன்



''உங்களுக்குச் சொந்தமான நிறுவனத்திலேயிருந்து நீங்களே உங்க மகனுக்குச் சம்பளம் போட்டுக்கொடுக்க இத்தனை விதமான யோசனையா? இருந்தாலும் உங்களை மாதிரி தர்ம நியாயத்தை ஒவ்வொரு விஷயத்திலும் பார்த்துக் கரெக்டா நடந்துக்கிறவங்க ஆயிரத்தில் ஒருவராகத்தான் இருக்கும்'' என்றாள் கலோசனா.

''ஆயிரத்தில் ஒருத்தரா? உலகிலேயே இவர் ஓர் அபூர்வப் பிறவி'' என்றாள் தனபாக்கியம்.

''அதனால்தான் எனக்கு மற்றவங்களைத் தட்டிக் கேட்கிற தைரியம் வரது தனபாக்கியம். நானே தர்மம் தவறினால் மற்றவங்களை எப்படிக் கண்டிக்க முடியும்? என் குழந்தைங்களை ஒழுக்கமுடையவங்களா எப்படி வளர்க்க முடியும்?'' என்றார் வைத்தியலிங்கம் கர்வம் தொனிக்க.

மணி ஏழரையை நெருங்கிக் கொண்டிருந்தது. மாலைப் பத்திரிகை வாசலில் வந்து விழுந்தது. கலோசனா அதை எடுத்து வந்து தர, வைத்தியலிங்கம் பிரித்துப் படித்தார். பக்கங்களைப் புரட்டி மூன்றாவது பக்கத்தில் ஒரு செய்தியைப் படித்தவர், இலேசாகச் சிரித்துக்கொண்டே, ''இதைக் கேட்டியா கலோ? பல்கலைக் கழகத் துணைவேந்தர்கள் எல்லாம் ஸ்ட்ரைக் பண்ணப் போறாங்களாம்! அனைத்திந்திய பல்கலைக் கழகத் துணைவேந்தர்கள் மகாநாட்டில் தீர்மானம் நிறைவேறியிருக்காம்!'' என்றார்.

''பேஷ்!'' என்றாள் கலோசனா. ''இத்தனை நாள் வரை மாணவர் ஸ்ட்ரைக் நடந்து கொண்டிருந்தது. பஸ்ஸைக் கொளுத்தினாங்க, பிரின்ஸிபாலைக் கெரோ பண்ணினாங்க, வி. ஸி.யை அழ வைச்சாங்க. அப்புறம் புரொபஸர்கள் லெக்சரர்கள் வேலை நிறுத்தம் நடந்தது. இப்போ துணைவேந்தர்களே ஸ்ட்ரைக் பண்ண ஆரம்பிச்சுட்டாங்களா?''

''என்னைக் கேட்டா துணைவேந்தர்கள் வேலைநிறுத்தத்தோடு நிறுத்திக் கொள்ளக் கூடாது! ஊர்வலமாகப் போய் ஒரு மாணவர் ஹாஸ்டல் முன்பு ஆர்ப்பாட்டம் பண்ணணும். அப்புறம் கட்டுப்பாடு இழந்து ஹாஸ்டலுக்கு உள்ளே போய் மாணவர்களின் அறைகளில் இருக்கிற மேஜை நாற்காலிகளை உடைக்கணும். புத்தகங்களைக் கிழிச்சு எறியணும். பத்திரிகை நிருபர்கள் கேட்கும்போது மாணவர்களின் எதேச்சாதிகாரப் போக்கைக் கண்டிக்க இப்படி நடந்துக்கிட்டதாகச் சொல்லணும்! அப்பவும்



மாணவர்கள் அடங்குவார்களோ இல்லையோ, துணைவேந்தர்களுக்கு மனக்கொதிப்பு அடங்கும்! இங்கே எவ்வளவோ தேவலை, வடக்கே பல மாநிலங்களில் ஸ்டூடண்ட் பிராப்ளம் விசுவரூபம் எடுத்திருக்கு.''

''ஏங்க? முன் காலத்திலே நம்ம தேசத்து ராஜாக்களெல்லாம் கோயில் கட்டறேன், ஏரி வெட்டறேன்னு பல காரியங்களைச் செய்தாங்களே அப்பல்லாம் இப்படி வேலைநிறுத்தம், உண்ணாவிரதம்னு இருந்துச்சா என்ன?'' என்று தனபாக்கியம் கேட்டாள்.

''கிடையவே கிடையாது. அப்படி ஒரு சரித்திர ஆசிரியனும் எழுதியதாகத் தெரியவில்லை. ஏன் தெரியுமா பாக்கியம்? அது மன்னன் ஆட்சி. இப்போ நடக்கிறது மக்கள் ஆட்சி. செங்கோலோ கொடுங்கோலோ அன்று மன்னன் சொன்னால் சொன்னதுதான். மீறுகிறவர்களுக்குத் தண்டனை தான். இன்றோ மக்களுக்கு வேலைநிறுத்தம் போன்ற உரிமைகள் வழங்கப் பட்டிருக்கின்றனவே.''




''இவர் கர்நாடக சங்கீதத்தில ரொம்ப ''பிராபல்யமான''வரு.''
''பிரபல்யம்''னு சொல்லுங்க!''
''ம்ம் ''பிராபல்யம்'' தான். ''பால்யத்திலேயே பிரபலமானவர்.'' - வெ. சீதாராமன்

''ஆகக் கூடி மக்கள் தங்கள் உரிமைகளைக் கட்டுப்பாட்டோடு பிரயோகிக்கலேன்னு மறுபடியும் சர்வாதிகார ஆட்சிதான் திரும்புங்கறீங்க.''

''சந்தேகமென்ன? சர்வாதிகார ஆட்சியில் தான் நாம் கட்டுப்பாடோடு நடந்துக்குவோம்னு அத்தகைய ஆட்சிக்குத்தான் நாம் தகுதியுடையவங்கன்னு தானே அர்த்தம்?''

இந்தச் சமயத்தில் போர்ட்டிகோவில் கார் ஒன்று வந்து நிற்கும் சத்தம் கேட்டது.

''யார் இந்த நேரத்தில்?'' என்று தனபாக்கியம் கேட்க, கலோ எழுந்து வாசல் பக்கம் போனான். ''அண்ணா! அண்ணா! உனக்கு என்ன? என்ன ஆச்சு?'' என்று நடுங்கிப் பதறிய அவன் குரல் கேட்டுத் தனபாக்கியம், ''என் ஐயா! என்னையா! என் கண்ணே! சத்யா உனக்கு என்னாச்சு?'' என்று அலறிக்கொண்டே வாசலுக்கு ஓடினாள். வைத்தியலிங்கமும் நாளிதழை ஒரு பக்கம் வீசி எறிந்துவிட்டுப் பரபரப்புடன் எழுந்து வாசலுக்கு வந்தார்.

அதற்கு முன்பே, ''ஒன்றுமில்லை கவலைப் படாதீங்க! கொஞ்ச நேரத்திலே எல்லாம் சரியாகிவிடும்'' என்று ஆனந்த் கூறிய மொழிகள் அவர் காதில் விழுந்தன. இருப்பினும் ஏதோ விபரீதம் நிகழ்ந்துள்ளது என்று புரிந்து கொண்டுவிட்ட உள்ளுணர்வுடன் அவர் பதைபதைப்புடன் வாசலை அடைந்தார்.

உதவ வந்தவர்களை விலக்கி விட்டுத் தானே சத்யாவைக் கைத்தாங்கலாகப் பற்றி நடத்தி அழைத்து வந்து சோபாவில் கிடத்தினான் ஆனந்த்.

வந்ததும் தெரியாமல், சோபாவில் விழுந்ததும் தெரியாமல் மயங்கிக் கிடந்தான் சத்யா.

''ஒண்ணுமில்லே ஸார்; நத்திங் ஸீரியஸ். கொஞ்சம் டோஸேஜ் அதிகமாயிடுத்து. அவ்வளவுதான். கல்யாணம் நிச்சயமானதிலே ஒரே குஷி. அதனாலே லிமிட் தெரியாமப் பாட்டிலைக் கவிழ்த்துக்கிட்டான். காலம்பற சரியாயிடுவான். கொஞ்சம் தலைவலி இருக்கும். இரண்டு ஆஸ்பிரின்னை முழுங்கினா அதுவும் சரியாயிடும்.''

ஆனந்த் கூறி முடிக்கும் முன்னரே அறையில் மிதந்த வாடை மூவருக்கும் விஷயத்தை உணர்த்திவிட்டது.

வைத்தியலிங்கத்தின் முகம் வெளிறிப் பேயறைந்தது போலாயிற்று. சத்யா நினைவிழந்து படுத்திருந்த சோபாவுக்கு எதிர்ப்புறமாக இருந்த இன்னொரு சோபாவில் நிற்கவும் வலுவிழந்தவராக விழுந்தார். ''பாக்கியம்! சற்றுநேரம் முன்னால்தானே பெருமை அடிச்சுக்கிட்டேன், நான் ஒழுக்கமா நேர்மையா இருந்தால்தானே பிறரைக் கண்டிக்க முடியும், பிள்ளைங்களை நல்லபடியா வளர்க்க முடியும் என்று? இப்போ எனக்கு ஒண்ணுமே புரியலையே? கலோ! வேர் டிட் ஐ ஃபெயில்! என்னை மாதிரி ஆயிரத்தில் ஒருத்தன்கூட இருக்கமாட்டான்னு சொன்னியே, கலோ! இப்போ, அதுக்குள்ளே, ஆயிரத்தோடு ஆயிரத்து ஒண்ணுன்னு நான் ஆயிட்டேனே? அதை என் மகன் நிரூபிச்சுக் காட்டிட்டானே!'' என்று நாத்தழுதழுக்கப் புலம்பினார். இந்த வேதனையைத் தாங்கிக் கொள்ளவே முடியாமல் முகத்தை மூடிக் கொண்டார். தனபாக்கியமும் கலோசனும் விசும்பி விசும்பி அழும் குரலொலி அறையை நிறைத்தது.

ஆனந்த் அவர் தோள்களைத் தட்டிக் கொடுத்தான். ''ஸார்! வாட் இஸ் திஸ்! தைரியமா இருங்க. ஆஃப்டர் ஆல் இது ஒரு சின்ன விஷயம். குடிக்கிறதுங்கிறது தமிழ் நாட்டிலேதான் குற்றம். நூறு மைல்காரிலே போய் எல்லையைத் தாண்டிட்டால் அப்புறம் உலகம் முழுவதும் மதுவை ருசித்தவர்கள் எண்ணிக்கைதான் அதிகம். சென்னைக் கடற்கரையை விட்டுக் கப்பலில் ஐந்து மைல் போயிட்டால் தாராளமாகக் குடிக்கலாம். விமானத்திலேறி வானில் பறந்துட்டாலும் குடிக்கிறது தப்பில்லே. எதுக்கு இப்படித் துடிக்கிறீங்க?''

வைத்தியலிங்கத்துக்குக் கோபம் வந்தது. ''யூ இடியட்! நான் சட்டம் பேசலேடா! நல்லொழுக்கம் பற்றிப் பேசறேன். பிள்ளைகளை வளர்ப்பது பற்றிப் பேசறேன். பெற்றோர்களின் கடமையை நினைச்சுப் பார்க்கிறேன். நான் எங்கே தவறினேன்? எப்படி என் மகளை மது அரக்கனுக்குப் பறி கொடுத்தேன்னு யோசிக்கிறேன். இதெல்லாம் உனக்கு எங்கே புரியப் போகிறது? ஒருவேளை சத்யாவுக்குக் குடிக்கக் கற்றுக் கொடுத்தவனே நீதானோ என்னமோ? வில் யூ கெட் அவுட் ஆஃப் மை ஹவுஸ் அட் ஒன்ஸ்?''

''நான் போறேன் ஸார்! தன்னை மதிக்காதவங்க வீட்டில் ஆனந்த் ஒரு நிமிஷம் கூடத் தேவைக்கு அதிகமாத் தங்க மாட்டான். உங்க மகளை நடுத்தெருவில் நாதியற்றுக் கிடக்க விட்டிருக்கலாம் நான். தோள் கொடுத்துத் தூக்கி என் காரில் ஏற்றி அழைச்சு வந்து இங்கே, படுக்க வைச்சிருக்கேன் பாருங்க. இந்த உபகாரத்துக்கு 'கெட் அவுட்'டுன்னு அழகா நன்றி சொல்லிட்டீங்க. நான் போயிட்டு வரேன். ஆனா அதற்கு முன்னால் ஒரே ஒரு விஷயம். உங்க கிட்ட அனுமதி கிடைச்சால் சொல்ல நினைக்கிறேன். அதாவது உங்க மகள், இந்த நிலைக்கு வரக் காரணம் என்னன்னு கேட்டீங்களே அதற்குப் பதில்!''

''என்ன அது? நீ உண்மைதான் சொல்வேன்னு என்ன நிச்சயம்?''

''நீங்க சுலபமா அதைச் சோதிச்சுப் பார்த்துக்கலாமே!''

''கல்யாணம் நிச்சயமான சந்தோஷத்தில் தான் ஓவராக் குடிச்சுட்டான்னு சொன்னியே!''

''அது நிஜம்தான். ஆனா இந்த மதுப் பழக்கம் ஏற்பட்டதற்குக் காரணம் — அதைத் தெரிஞ்சுக்க வேண்டாமா நீங்க?''

''சொல்லு'' என்றார் வைத்தியலிங்கம், சோகமாக.

## அத்தியாயம் 16

ஆனந்த் தனபாக்கியத்தையும் கலோசனாவையும் மாறி மாறிப் பார்த்தான்.

''உங்களிடம் தனிமையில் பேசித்தான் அதைச் சொல்லணும்'' என்றான்.

''யங்மேன்! உன் பேர் என்ன சொன்னே? ஆனந்த் இல்லே? கேட்டுக்கோப்பா ஆனந்த்! என் குடும்பத்தினரிடமிருந்து இன்றுவரை ஒரு சின்ன விஷயத்தைக்கூட நான் மறைச்சதில்லே. மறைப்பதற்கு அவசியம் இருந்ததில்லே. ஏன்னா, ஐ ஹேவ் நத்திங் டு ஹைட். இப்ப புதுசா நீ எங்கிட்டத் தனியாப் பேசணும்கிறே. வேண்டாம், நீ சொல்லப் போறது எல்லாருக்குமே தெரியட்டும். புதுப் பழக்கமா ஒளிவு மறைவு தேவையில்லே.''

''ஸார்! நீங்க நேர்மையாளராக ஒளிவு மறைவு இல்லாமல் நடந்துக்கலாம். ஆனால் மற்றவங்க சிலவற்றை உங்களிடமிருந்து மறைக்கலாமில்லையா?''

''அதுதான் புரிஞ்சு போச்சே! என் மகள் தனக்குக் குடிப் பழக்கம் இருப்பதை என்னிடமிருந்து ஒளிச்சு மறைச்சிருக்காளே!''

''உங்க மகள் கலோசனாவையும் கேளுங்க. மனசிலே கையை வைச்சுப் பேசச் சொல்லுங்க. உங்கக் கிட்டே ஒளிவு மறைவு இல்லாமல் நடந்துக்கிட்டிருக்காளா விசாரியுங்க!''

''கலோ! என்னம்மா இது? இவன் பொய் சொல்றான்னு சொல்லும்மா! அதிர்ச்சிக்கு மேல் அதிர்ச்சின்னா என்னால் தாங்க முடியாது தாயே!'' என்றார் வைத்தியலிங்கம் பரிதாபமாக.

''அப்பா!'' என்று ஓடி வந்து அவர் காலடிகளில் சுருண்டு விழுந்து பாதங்களைப் பற்றிக் கண்ணீரால் நனைத்தாள் கலோசனா. ''அப்பா! என்னை மன்னிச்சுடுங்க அப்பா! என்னை மன்னிச்சுடுங்க!'' என்றாள் திக்கித் திணறியபடி.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆



இப்போதெல்லாம் ஜெட் விமானத்தில் பயணம் செய்வது நேரத்தை மிகவும் மிச்சப்படுத்துகிறது.

நீங்கள் காலையில் டிபனை லண்டனில் சாப்பிடலாம். நடுப்பகல் உணவுக்கு நியூயார்க் போய் விடலாம்.

மாலையில் டோக்கியோவுக்குப் போய் அஜீரணக் கோளாறினால் அவதிப்படலாம்!

இல்லஸ்டிரேடட் வீக்லியிலிருந்து.
சேலம் தர்மசக்ரா.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

மகளும் மகனும் நடந்து கொள்ளும் விதத்தைப் பார்த்துத் தனபாக்கியம் அதிர்ச்சி அடைந்த போதிலும் அதைக்காட்டிலும் அதிகமாக, தன் கணவர் அதிர்ச்சி அடைவாரே என்றும் அந்த அதிர்ச்சி தன் கணவரிடத்தில் என்ன எதிர்விளைவை உண்டாக்குமோ என்றும் எண்ணிப் பார்த்தாள். அவருடைய வலக்கரத்தைத் தன் கைகளால் எடுத்துப் பிடித்துக் கொண்டு, ''தைரியமாயிருங்க உங்களுக்கு ஒரு குறையும் நேர ஆண்டவன் விடமாட்டான். தைரியமாயிருங்க'' என்று திரும்பத் திரும்பச் சொன்னாள்.

''நீங்க எந்த ஆண்டவனைக் குறிப்பிடறீங்க அம்மா? ஏசுவையா? முருகனையா?'' என்றான் ஆனந்த்.

''என்ன தம்பி உளறுகிறாய்?'' என்று தனபாக்கியம் மலர மலர விழித்தபடி கேட்டாள்.

''உளறல் இல்லேம்மா. உங்க மகன் தீபக் பாலைச் சர்ச்சிலே மணப்பாளா? இல்லே வடபழனியிலே கல்யாணம் செய்துப்பா




ளான்னு யோசனை பண்ணிப் பார்த்தேன். அவ்வளவுதான். மிஸ்டர் வைத்தியலிங்கம்! உங்க மகன் சத்யாவின் மனசை அரிச்சுக்கிட்டிருந்த வேதனை என்ன என்கிறதைப் புரிஞ்சுக்கிட்டிருப்பீங்கன்னு நினைக்கிறேன். இன்னும் தெளிவாச் சொல்லணும்னு வேற்று மதத்தவன் தீபக் என்பது மட்டுமில்லே. அந்தஸ்தில் உள்ள ஏற்றத் தாழ்வு வேறு சத்யா மனசைப் படாத பாடு படுத்தியிருக்கு. இவன் உங்க குடும்ப கௌரவத்தை மேலும் உயர்த்துவது மாதிரி யோகேஷ் மகளைக் காதலிச்சுக் கல்யாணம் பண்ணிக்கப் போறான். உங்களுக்குப் பெருமை சேர்க்கிறான். ஆனால் அதே நேரத்தில் உங்க மகள் உங்களுக்குக் கீழே வேலே செய்கிற ஒரு சர்வ சாதாரண மனுஷனோட, பைசா பெறாத பயலைக் காதலிச்சு உங்க குடும்ப கௌரவத்தைக் குட்டிச் சுவராக்கப் போகிறாள். இந்த நிலைமையிலே சத்யாவுக்குத் தன் வருங்கால மாமனாரைப் பார்த்துப் பேசக்கூடக் கூச்சமாகத்தானே இருக்கும்? இது வெளியே தெரிய வரும் போது சம்பந்தி வீட்டார் இவனை ஏளனம் செய்ய மாட்டாங்களா? அதை இவனால் தாங்கிக்க முடியுமா? இதையெல்லாம் மறக்கத்தான் ஸார், சத்யா மதுவை நாடிட்டான். உங்க மகளை இனி தீபக்கைச் சந்திக்கிறதில்லேன்னு சத்தியம் பண்ணச் சொல்லுங்க. அருண்ராஜை உங்க கம்பெனியிலேருந்து வேலையை விட்டுத் துரத்தி அடியுங்க. அடுத்த நிமிஷம் சத்யா சரியாயிடுவான்!''



அவன்: ''நீங்க என்ன அடிக்கடி கட்சி மாறிக்கிட்டிருக்கீங்க...?''

அவர்: ''சேச்சே... அப்படி ஒன்னுமில்லே...! நான் என்றைக்குமே ஆளுற கட்சியைச் சேர்ந்தவனாகவே இருந்து வந்திருக்கிறேன்!''

உ.. ராஜாஜி.



ஆனந்த் பேசி முடித்ததும் அங்கே சற்று நேரம் கனமான மௌனம் நிலவியது. தனபாக்கியம் பொறுமை இழந்து, ''படுபாவி! வாயைத் திறந்து சொல்லேன்! தீபக்கை இனி சந்திக்கிறதில்லேன்னு! என்னை மன்னிச்சுடுங்க அப்பான்னு சொல்லேன்'' என்றாள்.

''இந்தா பாக்கியம்! நீ சற்றுப் பேசாமல் அமைதியாக இரு'' என்று கடுமையாகக் கூறினார் வைத்தியலிங்கம். ''உனக்கு உன் பெண்ணை அதட்டி அடக்கணும், திருத்தணும்னு அதை மூன்றாவது மனுஷனை எதிரே வைச்சுக்கிட்டுச் செய்யாதே!'' பிறகு ஆனந்தைப் பார்த்து, ''அப்பனே! நீ சொல்ல வந்ததையெல்லாம் சொல்லி முடிச்சிட்டேயில்லே? நீ போகலாம். இனி இது எங்க சொந்த குடும்ப விவகாரம். இதில் உனக்குச் சம்பந்தமில்லே. நாங்க பேசிக்கறோம்'' என்றார்.

ஆனந்த் தோள்களைக் குலுக்கினான். ''ஓகே'' என்றான். ''நான் வரேன். சத்யா காலையில் எழுந்ததும் அவனுக்கு நான் செய்த உபகாரங்களைச் சொல்லுங்க. அவனுக்காக நான் வாதாடியதைத் தெரியப்படுத்துங்க. அவன் பெருமையா வாழ நீங்க எல்லோரும் உதவி, உங்க குடும்ப கௌரவத்தையும் காப்பாத்திக்கிட்டாத்தான் எனக்கும் வசதி. இல்லேன்னு அவன் மனசு உடைஞ்சு போய் மறுபடியும் என்கிட்டத்தான் ஆறுதல் தேடி வருவான். அப்பவும் நான் என்னாலான உதவியை அவனுக்குப் பண்ணுவேன். குடும்பத்தார் கைவிட்டாலும் நண்பன் ஆனந்த் கைவிட மாட்டான் என்கிறதை அவனுக்குச் சொல்லுங்க.''

இவ்விதம் கூறியபடியே திரும்பி நடந்தான் ஆனந்த். அவனுடைய கார் உறுமிக் கொண்டு புறப்பட்டுச் சென்றது.

தரையில் விழுந்து தகப்பனார் பாதங்களைப் பற்றியிருந்த சுலோசனாவின் கரங்கள் விடுபடவில்லை. அவருடைய முகத்தை ஏறிட்டுப் பார்க்கவும் அஞ்சித் தலைகுனிந்தபடி அழுது கொண்டிருந்தாள்.

தனபாக்கியம் 'ஓ'வென்று கதறினாள். வைத்தியலிங்கம் அசையாது சிலையாகி இருந்தார்.

இதற்கெல்லாம் பொருத்தமில்லாத காட்சியாக அனால் மூல காரணமாகிச் சத்யா சோபாவில் விகாரமாகக் குறட்டை விட்டுக் கொண்டிருந்தான்! (தொடரும்)

# காமசாஸ்திரம்

பட விமரிசனம்

காம சாஸ்திரக் காட்சிகளை எதிர்பார்த்துப் போகிறவர்களுக்கு ஏமாற்றம் மட்டுமல்ல, ஆத்திரமும் கூட வரும். வீட்டை விட்டு ஓடிப் போய்ச் சீரழியும் கேஸ்களை விளக்கும் கதை. கதையா...?

ஏதோ ஒரு படத்தில் 'செக்ஸ்' காட்சிகளில் நடித்துப் பாப்புலரான நடிகையைப் பயன்படுத்திப் பணம் பண்ணப் பார்த்திருக்கிறார்கள், படுதோல்வி.

ஓடிப்போன கேஸ்களுக்குத் துணையாக 'தண்ணி' வேறு படம் முழுதும் வெள்ளமாக ஓடுகிறது. தமிழ்நாடு அரசு மது விலக்கைத் தீவிரமாக்கச் சில சட்டங்களைக் கொண்டு வந்திருப்பதைக் கேலி செய்வதாக நினைத்துக் கொண்டோ என்னமோ குழம்புகிறார்கள், குழப்புகிறார்கள். ஏகப்பட்ட கதாபாத்திரங்கள் படம் பார்ப்போரையும் 'இர்' அடிக்க வைக்கிறது.

இந்தப் படத்திலும் அம்பாள் வருகிறார் யார் வருகிறார் — போதுமா?

அது சரி — ஏதோ சுமாராகத் தம் பாத்திரமறிந்து நடித்துக் கொண்டிருந்த மக்கள் கலைஞர் ஜெய் அவர்களைத் தயாரிப்பாளர்கள் ஏன் இப்படிப் படத்துக்குப் படம் பாடாய்ப் படுத்துகிறார்கள்? வித்தியாசமான 'ரோல்' என்ற பெயரில் அவருக்கிருக்கும் நற்பெயர் கெட்டுக் கொண்டிருக்கிறது. கோமாளி — நடைப் பைத்தியம் — அடித்தொண்டையில் கர்ஜனை இதெல்லாம் ஜெய்க்கு நன்றாக இல்லை. தவிர உடல் வேறு ஊதிக் கொண்டு வருகிறது.

காமசாஸ்திரம் படத்தில் காதல் பண்ணாமல் கச்சிதமாக நடித்திருப்பவர் — வழுக்கி விழுந்த பெண்களுக்கும் கன்னிகளைக் கடத்தி வரும் காளையருக்கும் இடம் கொடுத்துத் தொழில் நடத்தும் காரிகையாக வரும் மனோரமாதான். ஒளிப்பதிவும் ஒலிப்பதிவும் ரொம்ப வேதனை.

கலர் பிலிமை இப்படிப்பட்ட படத்துக்காக வீணாக்கியிருக்க வேண்டாம்.

— கௌசிகன்



என் நண்பர் ஒருவர் ஆங்கிலம் கலக்காமல் பேச மாட்டார். எழுதவும் வராது அவருக்கு. சமீபத்தில் அவர் எனக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார். அதில் சில வரிகள் இப்படி:

"என் Sum Sawrபம் சேNotடைய உdull நலம் ill lavமல் இருக்கிறன். Dockடரிடம் Cotuசேன். Moonru வாரம்பட்டினி போட்Tall குணமாகும் என்கிறார். Dockடர் megu உன்ன கோபத்தை என்Mayல் காட்டுகிறேன் Sawi!"

சரளா.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

# ஒரு சத்தியத்தின் அழுகை





சு. சமுத்திரம்

சிட்டாம்பட்டியில் சகல மனித ஜீவராசிகளும் கலந்துகொள்ளும் கலகநாடி அம்மன் திருவிழா துவங்கப் போகிறது என்பதை, அங்கேவரும் வெளியூர்க்காரர்கள், உள்ளூர்க்காரர்கள் சொல்லாமலே தெரிந்து கொள்ளலாம். அம்மன் கோவில் முன்பு 'சப்பரம்' (தேர்) நுழையும் உயரத்துக்குச் சரிந்து குவிந்த பந்தல் போடப்பட்டு, பந்தலில் ஜரிகைத் துணிகள், உள்புறத்தில் கட்டப்பட்டுக் கொண்டிருந்தன.

இந்தக் கோலாகலங்களை ரசித்துக் கொண்டே ராமசாமித் தேவரும், மாயாண்டி நாடாரும் கோவிலுக்குச் சற்றுத் தள்ளியிருந்த பூவரச மரத்தூணில் சாய்ந்து கொண்டே சுவாரஸ்யமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். இருவருக்கும் முப்பத்தைந்து வயது இருக்கலாம்.

தேவர், நாடாரிடம் 'சிலம்பாட்டத்துல... ஒரு வீச்சு... ஒரு குத்துன்னு மாறிமாறி வந்தாத்தான்... எதிரி அடங்குவான்' என்று சொல்லிக் கொண்டிருந்தபோது, ஒரு டீக் கடையிலிருந்து மொத்தமாக வந்த நான்கைந்து சர்வஜாதித் தலைவர்களில் நாடார்த் தலைவர் பெரியசாமி நாடார் 'உங்க வீரப்புல்லாம்... இங்கதான்... காலனிக்காரப் பசங்ககிட்டே பலிக்காது' என்றார். உடனே இருவரும் பேசுவதற்கிருந்த இடைவெளியில், தேவர்த் தலைவர் சின்னசாமித் தேவர் புகுந்து விளக்கினார்.

''பின்ன என்னப்பா... உங்க இரண்டு பேரோட ... வீரம்... பட்டிதொட்டிப் பதினூருக்கும் தெரியும்... நீங்க... ஆடாத சிலம்பா அடிக்காத ஆளா...? அப்படியிருந்தும் இந்தக் காலனிக்காரப் பயலுவ... திருவிழாவ... நடத்தவிடமாட்டோமுன்னு சொன்னு... உங்கள... பொம்பளையா நினைக்கறாங்கன்னு தான் அர்த்தம்'' என்றார்.

''தேவர் சொன்னதை... கவனிச்சிங்களாப்பா... இந்த ஹரிஜனப் பயலுவளும்... நம்ம கோவில் உற்சவத்துல... கலந்துக்குவாங்களாம். அவங்க கோயிலுக்கும் சப்பரம் போகணுமாம். இல்லேன்னு...''

''இல்லேன்னு... என்னவாம்?'' என்றார் மாயாண்டி நாடார்.

''இல்லேன்னு.. ஒங்க..பெண்டு பிள்ளைக... கழுத்துல தாலி இருக்காதுன்னு சொல்றாங்க.''

''அது மட்டுமா?... நம்மள மட்டந்தட்டுறதுக்காகவே, சப்பரத்தை மறிக்கப் போறாங்களாம்... போலீஸ்ல சொல்லலாமுன்னு நாடார் சொல்றார்'' என்றார் உள்ளூர் பிள்ளைவாள்.

''போலீஸ்ல சொல்றதுக்கு... நாம என்ன பொட்டப் பசங்களா?... ராமசாமி... நீயும் நானும்... கம்ப எடுத்துக்கிட்டுச் சப்பரத்துக்கு முன்னால போவோம். தடுக்க வார பயலுவள... அங்கேயே காவு கொடுக்கலாம்..'' என்றார் மாயாண்டி நாடார்.

சட்டாம்பட்டி பெரிய கிராமம். மேல் ஜாதிக் காரர்கள் பகுதி பகுதியாகப் பரந்திருக்க, 'காலனி' மட்டும் ஊருக்குச் சற்றுத் தொலைவில், கழற்றிப் போடப்பட்ட காலணி போல் ஒதுங்கி இருந்தது. ஆசாரிப் பகுதியில் கடலைமாடனும், நாடார்

### பணக்காரப் பிச்சைக்காரர்!



பம்பாய் தாதர் பகுதியில் பார்சி காலனியில் உள்ள ஒரு பிச்சைக் காரருக்கு அந்தப் பகுதியில் உள்ள பாங்குக்கு மாற்றலாகி வந்த ஓர் அதிகாரி தினமும் பிச்சை போடுவார். ஒருநாள் அந்தப் பிச்சைக்காரர் அந்தப் பாங்குக்கு செக் புத்தகத்தோடு வந்து 100 ரூபாய் பணம் வாங்கிப் போனார். அதைப் பார்த்த அந்த அதிகாரி கணக்குப் புத்தகத்தைப் புரட்டிப் பார்த்தபோது அந்தப் பிச்சைக்காரர் கணக்கில் நாற்பதாயிரம் ரூபாய் இருந்தது தெரிந்தது.

—கரண்ட்.

—பாபு.

பகுதிக்குச் சங்கிலிக் கருப்பனும், தேவர்க்கு மயான புத்திரனும், பிள்ளை, பண்டாரங்களுக்கு ''பிள்ளையாரும்' குலதேவதைகள். ஒவ்வொரு ஜாதியினரும், தத்தம் குலதெய்வத்திற்கு உற்சவம் நடத்துவதுண்டு. இவை போதாதென்று ஊருக்குப் பொதுவாக, கலகநாடி அம்மனும், முருகனும் பொதுக் கோவில்கள். கலகநாடி அம்மன் ,விழா, ஆடி மாதத்திலே 'ஐம்பெரும்' விழாவாக நடக்கும். முதல்நாள் பிள்ளைகளும், பூக்கட்டி பண்டாரங்களும் 'சைவ' பூஜை நடத்தி, ஓர் உபன்யாசத்தை ஏற்பாடு செய்வார்கள். அடுத்த நாள், தேவர்களின் வில்லு பாட்டு. அதற்கடுத்த நாள் நாடார்களின் 'கணியான்.' பிறகு ஆசாரிகள், விழா எடுப்பார்கள். இறுதிநாளில், சப்பரத்தில் கலகநாடி அம்மன் பவனி வர, மேற்கூறிய ஒவ்வொரு கோவில் முன்னாலும், சப்பரம் நிற்க, சம்பந்தப்பட்ட சாமி கோவிலில், கபூர்ர ஆராதனை செய்யப்படும். கலகநாடி அம்மனின் அருள்வந்து ஆடும் சாமியாடி, ஒவ்வொரு கோவில் முன்னாலும் ஓடிப்போய் ஆடுவார். ஆடி போய், ஐப்பசியில் முருகனுக்கு சைவ பூஜை நடக்கும். இதில் எல்லா ஜாதி இந்துக்களும் 'வரி' கொடுத்து விழா எடுப்பார்கள். இது, பரம்பரை பரம்பரையாக நடக்கும் பழக்கம்.

இந்தப் பரம்பரைப் பழக்கத்தை, பரம்பரை பரம்பரையாக ஒதுக்கி வைக்கப்பட்டிருந்த 'காலனி' ஆட்கள், மாற்ற நினைத்தார்கள். தாங்களும், கோவிலில் ஒருநாள் விழா எடுக்க வேண்டும் என்று சாடை மாடையாகக் கேட்டு, பின்னர் நேரடியாகவே கேட்டார்கள். இதற்கு முதலில் ஆதரவு கொடுத்த உள்ளூர் அரசியல்வாதிகள், பின்னர் மெஜாரிட்டி வோட்டில்லாத அவர்களைக் கைவிட்டதோடு ஜாதி இந்துக்களோடு சேர்ந்து கொண்டார்கள். இதற்கிடையே தங்களுக்குக் கோவில் பாத்தியதை இல்லாததால் சப்பரத்தை மறிக்கலாம் என்று, ஹரிஜன வாலிபன் கந்தசாமி சகாக்களிடம் சொல்லிப் பார்த்த வார்த்தை, அங்கேயுள்ள ஒரு ஹரிஜன கண்டிராக்டர் மூலம் கிராமத்தின் ஜாதி இந்துத் தலைவர்களுக்கு எட்டியது. வரிந்து கட்டி, வருவதை எதிர்ப்பதற்காக இவர்கள் ராமசாமித் தேவர், மாயாண்டி நாடார் போன்றவர்களை முன்னணியில் தள்ளும் முயற்சியில் இறங்கினார்கள்.

கோவில் விழா துவங்கியது. இவர்கள் எதிர்பார்த்ததுபோல் எந்த 'காலனி'வாசியும் கலாட்டாவுக்கு வரவில்லை. அதோடு, வழக்கமாகத் தொலைவில் நின்று விழாவை ரசிக்கும் 'சைலண்ட் மெஜாரிட்டி' ஹரிஜனங்களும் வரவில்லை.

இறுதிநாள் விழா!

பூச்சரங்கள் அலங்கரிக்கப்பட்ட சப்பரம், கலகநாடி அம்மன் சிலையைச் சுமந்துகொண்டு, வாண வேடிக்கை வெடிக்க, 'ஸெட்டு' மேளம் ஒலிக்க, 'கணியான்' ஆட, பொய்க்கால் குதிரைகள் தாவ, சப்பரம் ஒவ்வொரு கோவில் முன்பும், நின்று நிதானித்து, சேரிப் பக்கத்தான் ஊரை வலம் வர முடியும். கள்ளச் சாராயம் காய்ச்சும் சில ஹரிஜனத் தலைவர்கள் மூலமாக அவற்றைக் குடிக்கும் சில ஜாதி இந்துக்களுக்கு எட்டின செய்திகள், சர்வசாதித் தலைவர்களுக்கு எட்டியிருந்ததால், அவர்கள், ராமசாமி, மாயாண்டி போன்ற வீரர்களை கத்தி அரிவாளுடன் 'சைடில்' அமர்த்தியிருந்தார்கள். சப்பரம், சேரிக்குச் சற்றே தொலைவில் உள்ள நடத்தில், பாதையைக் கடந்தபோது, அடியில் அங்கே இருந்த புளிய மரத்திற்கு இருந்து கிட்டத்தட்ட ஐம்பது அறுபது 'காலனி' ஆட்கள் சொல்லி வைத்ததுபோல் எழுந்து, சப்பரத்துக்கு முன்னாலும் வழி மறிப்பதுபோல நின்று



னும், வழி மறிக்காதவர்கள் போல் வினய மாகப் பேசினார்கள்.

'எங்களை... கோயில்லதான் சேர்க்கல... எங்க கடலைமாடனுக்கும் கற்பூரம் காட்டிட்டுப் போகப்படாதா?''

இது, நியாயமான கோரிக்கைதான் என்று பெரும்பாலானவர்கள் நினைத்தபோது, நாடார் தலைவர் பெரியசாமி, 'இது என்னடா... வழக்கமில்லாத வழக்கம்' என்று கடுமையாகக் கேட்டார். 'எங்க சப்பரம் ஹரிஜன சாமிங்ககிட்ட வராது. செய்ய முடிஞ்சதைச் செய்யுங்க' என்றார் தேவர்கோன். சுடலைமாடனையே ஹரிஜனனாக்கிய வெங்கொடுமையை நினைத்து, ஜாதி இந்துக்களை தவித்தபோது, கந்தசாமி பௌவ்யமாகக் குழைந்து பேசினான்.

''நீங்க கும்புடுற மாடனைத்தான் நாங்களும் கும்புடுறோம். ஹரிஜன சுடலமாடன்னு தனியா இல்ல. இதுமாதிரியே மனுஷனுக்கும் மனுஷனுக்கும் வித்தியாசம் பார்க்கலாமா? எங்க பொம்புளைங்களை ஒங்களுக்குக் கட்டினால் குழந்தை பிறக்காதா? 'இல்லன்னா... ஒங்க பொம்புளைப் புள்ளைங்கள... எங்க ஆட்களுக்குக் கொடுத்தால் குழந்தை பிறக்காதா...?''

அவ்வளவுதான்.

'எங்க பொம்புளைங்களையாடா... கேக்குற?' என்று தேவர்த் தலைவர் போர் முழக்கம் செய்ய 'செறுக்கி மவனுகள அடிக்காம... எதுக்குலே பேசுறியரு' என்று நாடார்தலைவர் சங்கநாதம் செய்ய 'சைடில்' நின்ற மாயாண்டி நாடாரும், ராமசாமித் தேவரும் வேல் கம்புகள் சகிதமாகக் கூடிய இளைஞர் பட்டாளத்துடன், ஹரிஜனங்கள் மேல் பாய்ந்தார்கள். யார், யாரை அடிக்கிறார்கள் என்று புரியவில்லை. ஒரே கூக்குரல். பெண்களின் ஒப்பாரி. பிள்ளைகளின் ஓலம். அடிக்கும் கம்புகளின் சத்தம். அடிபட்டவர்களின் முனகல்கள். சாமியாடியும், ஆட மறந்து அல்லது அப்போது அது முக்கியமல்ல என்று நினைத்தவர்போல், சப்பரத்திலிருந்த ஒரு கொம்பை உருவிப் போர்க்களத்தில் இறங்கினார்.

கந்தசாமி, மயக்கமாகி ரத்த வெள்ளத்தில் கிடந்தான். அரைமணியில் நேரத்திற்குள் எல்லாம் ஆய்ந்து, ஓய்ந்து அடங்கியது. கந்தசாமி ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போகப்பட்டான். அங்கே பிரேதப் பரிசோதனைதான் நடந்தது.

மறுநாள் போலீஸ் வந்தது. அதற்கு மறுநாள் மீண்டும் சகஜ நிலைமை திரும்பியது. 'இந்த ஊர்லயா இந்தச் சண்டை நடந்தது' என்று ஆச்சரியப்படும்படி சேரிக்காரர்கள் ஊருக்குள் வந்தார்கள். ஊர்க்காரர்கள், 'குடிப்பதற்காக'ச் சேரிக்குள் போனார்கள். ஊரின் ஒருமைப்பாடு மீண்டும் நிரூவப்பட்டது. கந்தசாமி எப்படிக் கொல்லப்பட்டான் என்பது இந்திராநகர் கொலை மாதிரி ஆகிவிட்டது.

ஆடியில் இருந்து ஐப்பசி வரைக்குந்தான்..

முருகனுக்கு உற்சவம் தொடங்கி முடிந்தது. 'படைப்பை' எடுத்தார்கள். தேங்காய்ப்பழங்களைக் 'கூறு' போட்டார்கள். கிட்டத்தட்ட நானூறு பங்கு. அந்த ஊர் வழக்கப்படி, ஆசாரி, பிள்ளை, பண்டாரம், நாடார், தேவர் ஆகிய 'பஞ்சவர்ணங்களில்' யார் வயதில் பெரியவரோ, அவரிடம் முதல் 'பங்கை'க் கொடுப்பார்கள். இந்த வருடம் கப்பு நாடாருக்கு, 'பங்கை', நாடார் தலைவர் நீட்டியபோது, தேவர் தலைவர் 'கப்பு நாடாரைவிட எங்க... பெருமாள் அண்ணன் தான் மூத்தவரு' என்றார். கடந்த ஒருமாதமாக நாடார் தலைவருக்கும் இந்தத் தேவர் தலைவருக்கும் மனஸ்தாபம்.

வயதில் மூத்த நாடார், வாங்கப் போன கையை மடக்கினார். இதேபோல் வயதான தேவர், மடக்கி வைத்த கையை நீட்ட, நாடார் தலைவர் முழங்கினார்.

'எங்க கப்பு பெரியய்யாதான் மூத்தவரு!'

'இல்ல... எங்க பெருமாள் அண்ணன் தான்.'

'தேவரே... நீங்க இப்படி பேசுறது நியாயமில்ல'.

''வாயை மூடும், நாடாரே!'' 'எங்க கப்பு பெரியய்யா வுக்குப் பங்கு கொடுக்கட்டா... நானே எடுக்கப் போறேன்.'

'எடுக்கிற கையை வெட்ட எவ்வளவு நேரமாகும்?'

'வெட்டிப் பாருடா...!'

'கிட்ட வாடா...!'

விவகாரம், யாரும் எதிர்பாராமல், யாரும் கலந்துரையாடல் செய்யாமல், நாடார் தலைவராலும், தேவர் தலைவராலும் வகுப்பு வாதமாகியபோது, யாருக்கும் பெருமாளிடமோ அல்லது கப்புவிடமோ யார் மூத்தவர்கள் என்று கேட்கத் தோன்றவில்லை.

திடீரென்று பெரியசாமி நாடார் 'பங்கை' எடுத்து கப்பு நாடாரிடம் நீட்டினார். உடனே தேவர் தலைவர், அதைத் தட்டி விட்டார். தேங்காய்த் துண்டுகளும், வாழைப்பழமும் மட்டும் சிதறி ஓடவில்லை. கப்பு நாடார் ஏற்கெனவே எண்பதைத் தாண்டியவர். சின்னசாமித் தேவர் தட்டிய வேகத்தில், அந்தப் பெரியவர் நிலைகுலைந்து கீழேவிழ, அவர் தலை, தேங்காய்களை உடைப்பதற்காக வைத்திருந்த அரிவாளில் பட்டு, ரத்தம் நீரூற்று போல் பொங்கியது. இதை அருகிலிருந்து பார்த்துக் கொண்டிருந்த மாயாண்டி நாடாருக்கு மனசு கேட்கவில்லை. தேவர் உட்

ஹோட்டல் முதலாளி: டேய் அம்பி. சீக்கிரம் ஓடிப்போய் பக்கத்து ஹோட்டலிலிருந்து நல்ல காப்பியா ஒன்னு வாங்கி வா. தலைவலி தாங்கவில்லே.

சர்வர்: இதே காரணத்தைச்சொல்லித்தான் அந்தக் கடை அம்பி நம்ப கடையிலிருந்து காப்பி வாங்கிக் கொண்டு போறான்.

- லலிதா செல்லப்பா.





இவன்: உனக்கு விடை தெரிஞ்சாக் கூடத் தப்புத் தப்பாப் பதில் சொல்லிட்டு ஏண்டா பெஞ்சிலே ஏறிக்கறே?
அவன்: அப்பத்தானே தெருவிலே நடக்கற வேடிக்கை எல்லாம் நல்லாத் தெரியுது!
-கே. ஆர். எம்.

---

பட யாரும் எதிர்பாராமல் நடந்த இந்த அசம்பாவிதத்தைப் பார்த்ததும், மாயாண்டி நாடார், பெரியவரின் மண்டையைப் பிளந்த அதே அரிவாளை எடுத்து, சின்னசாமித் தேவரை, கழுத்தில் வெட்டப் போனார். குறி பார்க்கப்பட்டவர், அனிச்சையாக ஒதுங்க, அந்த அரிவாள் எதிர்பாராதவித மாக ராமசாமித் தேவரின் கையில் பட்டு, அந்தக் கை கீழே தொங்கியது.

இப்போதும் எதிர்பாராமல் இன்னொன்று நடந்தது.

ராமசாமித் தேவர், ஒரு கையில் அரி வாளைப் பிடுங்கி, என்ன செய்கிறோம் என்பது புரியாமலே, ஒரு வீச்சு வீசியபோது மாயாண்டி நாடார் ரத்த வெள்ளத்தில் மிதந் தார். அந்த வெள்ளம் கொடுத்த போதையில், ஒவ்வொருவனும் தன்னையும் அடித்துக் கொண்டான்; பிறரையும் அடித்துக் கொண் டான். சரமாரியான அரிவாள் வீச்சுக்கள், தெய்வதரிசனத்திற்காகக் கூடிய மனிதனின் மிருகத்தனத்தை அங்கேதான் பார்க்க வேண் டும். முடிவில்...

நான்கு, ஜாதி இந்துப் பெண்கள் கந்த சாமியின் மனைவியைப் போல ஆனார்கள்.

எல்லாம் முடிந்த பின்பு, எங்கிருந்தோ போலீஸ் வந்தது. ஒருசிலரை ஆஸ்பத்தி ரிக்கும், பலரைப் போலீஸ் நிலையத்திற்கும் கொண்டு போனார்கள்.

இந்த வீரபுலத்தின் ஓராண்டு நிறைவு, விழா இல்லாமலே முடிந்தது. காலம் ஓடியது. கோர்ட்டில் வழக்குகள் நடந்து கொண்டிருந் தாலும், யார் யாரை வெட்டியது என்று நிரூபிக்க முடியாததால், அவை இழுபறி நிலையில் கிடந்தன.

ஒரு கை அடியோடு போன ராமசாமித் தேவர், இன்னொரு கையால் வேட்டியைச் சரி செய்துகொண்டே, குளத்துக்கரையில் நடந்து கொண்டிருந்தார். ஓராண்டு காலத் திற்கு முன்பு, அதே இடத்தில் மாயாண்டி நாடாருடன் பேசிக் கொண்டிருந்த இனிய நட்பின் சுசப்பைச் சுவைக்க இப்போது எதிர்த் திசையில் இருந்து ஒரு கண் போய், தோள்பட்டை சரிந்த மாயாண்டி நாடார் வந்து கொண்டிருந்தார்.

இருவரும், ஒருவரை ஒருவர் நெருங்கி விட்டார்கள். கலகத்துக்குப் பிறகு இப் போதுதான், ஒருவரை ஒருவர் நேருக்கு நேராகத் தனிமையில் சந்திக்கிறார்கள். இருவர் கண்களிலும் நீர் கரந்தது. ஒருவர் இன் னொருவரின் ஊனத்தை, அனுதாபத்தோடு பார்த்தார்கள். ஆண்டாண்டுகால நட்பும், பாசமும், நேசமும் அவர்களை நெக்குருகச் செய்தன.

பத்தடி தாண்டியதும் இருவரும் ஒருவரை ஒருவர் திரும்பிப் பார்த்தபோது, குளத்தில் குளித்து முடித்த காத்தாயி, ஈரப்புடவை யுடன் கரைக்கு வந்தாள். காத்தாயி, கந்த சாமியின் பனைவி. அவர்கள் இருவராலும் விதவையாக்கப்பட்ட இளம் விதவை.

காத்தாயி உரக்கக் கத்தினாள்.

'அண்ணன்மாரே... ஒங்க ரெண்டு பேரைத் தான். இங்க... வாங்க... ஒங்க பேலே... எனக்குக் கோபம் இல்லை... வாங்க...'

இருவரும் வந்தார்கள்.

'உங்கள நாடாரே, தேவரேன்னு கூப்பு டாமல், அண்ணன்னு கூப்புட்டதுக்கு... அர்த்தம் தெரியுமா? இப்ப பாத்தீங்களா? வுங்க கோயிலுல பந்தல் போட, எங்க சேரிக் காரர்தான் காண்டிராக்ட் எடுத்திருக்கார். ஒங்க... சாதிக்காரங்க... அங்க... கூடிக் கும்மாளமாடுறாங்க... என் புருஷன் சொன் னதைத்தான் ஒங்ககிட்ட சொல்லப் போறேன். உலகத்துலெ... ரெண்டே ரெண்டு சாதிதான் உண்டு. ஒண்ணு பணம் இருக்கிறவங்க சாதி. இன்னொண்ணு அது இல்லாதவங்க சாதி. இந்த ரெண்டு ஜாதிங்க தவிர... வேற சாதிங்க இருக்கப்படாது. நினைச்சிப் பார்த்தால், இல்லவும் இல்லே. பணக்காரன் எனைக்கும் பணக்காரன் கூடத்தான் சேருவான். பணக்காரன் சாதி பார்க்காதபோது... நாம... ஏழைங்க... சாதி பார்க்கலாமா? நாடார் அண்ணாச்சி... ஒம்ம வண்டிமாட்ட எதுக்காக வித்தீரு? தேவர் அண்ணே... ஒம்ம நிலம் போனு தாலே... ஒம்ம நிலைமையை நினைச்சிப் பாத்தீரா? என் புருஷன் ஒங்களுக்கு என்ன கெடுதல் செய்தாரு? சொல்ல முடியுமா?''

படபடவென்று பேசிய காத்தாயி, இப் போது குலுங்கிக் குலுங்கி அழுதாள். அந்தச் சத்திய அழுகையின் வெம்மை தாங்க முடி யாமல் ராமசாமித் தேவரும், மாயாண்டி நாடாரும், ஒருவர் கையை ஒருவர் பிடித்துக் கொண்டார்கள்.

''கவலைப்படாதே... காத்தாயி... நீ... எங்க... சாதில பிறக்காததுனாலேயோ இல்ல... எங்க... கூட பிறக்காததுனாலேயோ ... நீ... தங்கச்சியா இல்லாம போயிட மாட் டேன்னு, எல்லாச் சாதிக்காரனுக்கும். எல்லா வகையிலேயும் நிரூபிக்கப் போறோம்'' என்று ராமசாமித் தேவர் ஒரு கையை ஆட்டிக் கொண்டு சொல்ல, மாயாண்டி நாடார், தன் பள்ளமாய்ப் போன தோளைக் குலுக்கிக் கொண்டே அதை ஆமோதிக்க, மூவரும் ஊரைப் பார்த்துப் போனார்கள்.

# அது என்ன பெட்டி?



கோமதி ஸ்வாமிநாதன்

[எழுத்தாளர் பஞ்சாமிர்தத்தின் வீட்டு ஹால். பஞ்சாமிர்தம் கையில் நாலைந்து விளம்பரச் சுற்றறிக்கைகளை வைத்துப் பார்த்துக் கொண்டிருக்கிறார். அவர் பையன் ராஜு வருகிறான்.]

ராஜு: என்னப்பா! கையிலே ஒரேயடியாக டெலிவிஷன் செட் விளம்பரங்களாகச் சேர்த்து வைத்துக் கொண்டு. ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கிறீர்கள்? புதிதாக ஏதாவது டி. வி. செட் மார்க்கெட்டிலே பிறந்திருக்கிறதா?

பஞ்சாமிர்தம்: வாயை மூடுடா! அதிகப் பிரசங்கித்தனமாக எதையாவது உளறுதே!... இந்த விளம்பரங்களையெல்லாம் பார்த்து எது நல்ல செட் என்று சொல்லு! நாளைக்கே வாங்கியாக வேண்டும்.

ராஜு: விளம்பரங்களையெல்லாம் பார்க்கிறேன்! ஆனால் நம்ப வீட்டுக்கு டி. வி. செட் வேண்டாம்!

பஞ்சாமிர்தம்: அபசகுனம்! அபசகுனம்! உன்னை மாதிரி யாரு வீட்டிலாவது புகுந்து நுழைந்து இடுக்கில் நின்று என்னால் ஒசியில் பார்க்க முடியுமா?

ராஜு: நம்ப வீட்டிலே அப்படி நாற்பது பேர் நுழைவதைத் தவிர்க்கத்தான் நான் டி. வி. செட் வேண்டாம் என்றேன். அப்புறம் நம்ப வீட்டு ஹால் ஒரு 'மினி மரீனா' ஆகிவிடும்!

பஞ்சாமிர்தம்: 'நோ அட்மிஷன்' போர்டு மாட்டுவேன்.

ராஜு: நீங்க 'நோ வேக்கன்சி'ன்னு மாட்டினாக்கூட யாரும் கவனிக்க மாட்டார்கள். மதிக்க மாட்டார்கள்! உள்ளே வந்து உங்க முதுகிலே சாய்ந்தே உட்காருவார்கள்!

பஞ்சாமிர்தம்: கதவைத் தான் போட்டுப் பூட்டி விடுவேன்! போடா! ஹாய்யாக நான் என் வீட்டுக் கூடத்திலே படுத்துப் புரண்டு கொண்டே சர்வ சுதந்திரமாக டி. வி. பார்க்க வேண்டும் என்று தீர்மானித்து விட்டேன்! நாட்டுக்குக் கிடைத்த சுதந்திரம் என் வீட்டுக்குக் கிடைக்காதா?... பார்த்து விடுவோம்! (பஞ்சாமிர்தத்தின் மனைவி பெரிய நாயகி உள்ளிருந்து வருகிறாள்.)

பெரியநாயகி: நான் கேட்டுக் கொண்டே தான் இருக்கிறேன்! ராஜு! உங்க அப்பா ஆனந்தமாகப் படுத்துக் கொண்டே டி. வி. பார்க்கட்டுமேடா! இப்போ சொப்பனம் காண்கிற மாதிரி டி. வி. பார்ப்பார்!

பஞ்சாமிர்தம்: வந்துட்டியா? நீ மாத்திரம் டி. வி. யிலே சினிமாப் படம் பார்க்காமல் காந்தாரி மாதிரி கண்ணிலே துணியைக் கிழித்துக் கட்டிக் கொண்டு விடுவாயோ?

பெரியநாயகி: இருந்திருந்து டி. வி. வாங்கி, அதன் முன்னாலே படுத்துண்டு கண்குளிரப் பார்க்க ஆசைப்படுகிறீர்கள். இந்த நேரத்திலே ஏன் திருதராஷ்டிரனோட உங்களை ஒப்பிட்டுக் கொள்கிறீர்கள்?

ராஜு: பேஷ்! அம்மா!... நீ கதை கேட்கப் போவதாகச் சொல்லி நிஜமாகவே கதை கேட்டிருக்கிறாய்! வம்பு அடிக்கலே!

பெரியநாயகி: வாயை மூடுடா! உங்க அப்பா டி.வி. வாங்குறதிலே எனக்குச் சம்மதம். ஆனால் என் யோசனையையும் அவர் கேட்டா...

பஞ்சாமிர்தம்: (உற்சாகத்துடன்) சொல்லு! சொல்லு! எந்த செட்டு வாங்கலாம்!

பெரியநாயகி: டி. வி. செட்டா? எனக்கு அதெல்லாம் தெரியாது! நீங்க எதை வேணும்னாலும் வாங்குங்கோ! ஆனால் அந்த செட்டை மேலே தூக்கி இரண்டு உத்திரங்களுக்கு நடுவிலே கீழே பார்த்துக் கட்டித் தொங்க விட்டுவிடுங்கள். நீங்க ஹாய்யாகக் கீழே மல்லாந்து படுத்துக் கொண்டு படம் பார்க்கலாம்! கோவில்களிலே பிராகார மேல் தளங்களிலே படங்கள் போட்டிருப்பதைப் பார்க்கிற மாதிரி இருக்கும்!

பஞ்சாமிர்தம்: பஸ்டு கிளாஸ் யோசனை! பெரியநாயகி! உனக்கு ஒரு 'புது கண்டு பிடிப்பு' பரிசே கொடுக்கலாம்! இப்போ சொல்லுடா ராஜு! எவனாவது ஓசியிலே பார்க்க வந்து கழுத்தைச் சுளுக்கிப்பானா? ஒரு பயல் வரமாட்டான்!

ராஜு: ஏன் வர மாட்டான்! பாய், ஜமுக்காளம், தலையணை சகிதம் வந்து உங்க பக்கத்திலே படுத்துக் கொண்டு விடுவார்கள்! வீட்டுக் கூடம் கல்யாண வீட்டுப் பந்தல் மாதிரி இருக்கும்! இருபது பேர் உட்காரறதுக்குப் பதிலாக ஐந்துபேர் படுத்திருப்பார்கள்!... அம்மா கிண்டல் பண்ணுகிறாள்! நீங்க அதை மகா சத்தியமாக எடுத்துக் கொண்டு...

பஞ்சாமிர்தம்: ஓஹோ! அப்படியா! பெரியநாயகி! உனக்கு அவ்வளவு அலட்சியமாக இருந்தால் நீ டி. வி. பார்க்க வேண்டாம்!.

ராஜு: அப்பா பேசாமல் ஒரு 'போர்ட்டபிள்' டி. வி. செட்டை வாங்கி, பஜனை கோஷ்டிக்காரர்கள் சுருதிப் பெட்டிகளைக் கழுத்தில் மாட்டிக் கொண்டு நடப்பதுபோல் கழுத்

தில் மாட்டிக் கொண்டு நினைத்த இடத்திலே உட்கார்ந்து பார்க்கலாம்!

பஞ்சாமிர்தம்: வீட்டிலே மூணு பேருக்கு மூணு கட்சி! மூணு நோக்கங்கள்! போங்கடா!... நான் நாளைக்கு டி. வி. வாங்கிக் கொண்டு வந்து வைத்து விடுகிறேன்! அப்புறம் உங்க அபிப்பிராயங்களை அவிழ்த்துக் கொட்டுங்கோ!

ராஜு: எதுக்கும் பக்கத்து வீட்டுப் பத்மநாபன் கிட்டே ஒரு வார்த்தை சொல்லிடுங்க!

பஞ்சாமிர்தம்: ஏன்? அவன் பெரிய எக்ஸ்பர்ட்டோ?

ராஜு: இல்லே இல்லே! அவர் இப்பவெல்லாம் பக்கத்துத் தெருவிலே ஒரு வீட்டுக்குப் போய் டி. வி. யிலே சினிமா பார்த்துவிட்டு வருகிறார். நீங்க வாங்கிட்டீங்கன்னு அவருக்கு ஒரு நடை மிச்சமாகுமே!

பஞ்சாமிர்தம்: நீயே ஒரு பிட் நோட்டீஸ் அடிச்சு விநியோகம் பண்ணிடுவே போலிருக்கே!... பத்மநாபன் பக்கத்துத் தெருவுக்கே போகட்டும்! இங்கே வரவேண்டாம்!... இந்தா! அந்த பீரோவை நகர்த்தி எங்கேயாவது தள்ளு! அங்கே தான் டி. வி. வந்து உட்காரப் போகிறது.

காட்சி — 2

[மறுநாள் முன்னிரவு நேரம்.

பஞ்சாமிர்தம் ஒரு டாக்சியில் பெரிய அட்டைப் பெட்டியுடன் வந்து இறங்குகிறார்.]

ராஜு: அடேடே! இந்த அப்பா சும்மா சொல்லிக்கிட்டு இருந்தார்னு நினைத்தேன். நிஜமாகவே டி. வி. வந்துவிட்டது போலிருக்கே.

பெரியநாயகி: உங்க அப்பாவுக்கு ஆட்டுப் பிடிவாதம் எப்பவுமே உண்டு.

ராஜு: அக்கம்பக்கத்து உறவு கெட்டுடும்!

பஞ்சாமிர்தம்: என்னடா உலக்கை மாதிரி நிற்கிறாய்! இதை வந்து ஒரு கைகொடுத்து உள்ளே கொண்டு போய் வையேன்!

ராஜு: செகண்ட் ஹாண்ட் செட்டா! பெட்டி ரொம்பப் பழசாக இருக்கே!

பெரியநாயகி: இன்றைக்கு என்னடா டி. வி. யிலே புரோகிராம்? பேப்பரைப் பார்த்தியா?

பஞ்சாமிர்தம்: கம்பன் கண்ட ராட்சசிகள்! பரதன் பார்த்த வானரங்கள்! ஆண்டாளைக் கவர்ந்த அரங்கன்! காந்திஜி கண்ட சுதந்திரக் கனவு...

ராஜு: என்னப்பா! ஒரே வளவளன்னு பேச்சாக இருக்கும் போலிருக்கே நிகழ்ச்சிகள்!

பஞ்சாமிர்தம்: நீ பார்க்க வேண்டாம்! வளவள இல்லேடா! எல்லாம் ஒரே பளபள! அட்டைப் பெட்டிக்குள்ளே அத்தனையும் அற்புதமான புஸ்தகங்கள். எதிர்பாராமல் புத்தகக் கண்காட்சிக்குள்ளே நுழைந்தேன். அடேயப்பா! இத்தனை புத்தகங்களையும் படிக்க வாழ்நாளே போதாதே!... அதிலே பாதி நேரத்தை டி. வி. பார்த்துக் கழிக்க வேண்டுமோ என்று தோன்றியது. ஐந்நூறு ரூபாய்க்கு புஸ்தகங்களை வாங்கிக் கொண்டு வந்து விட்டேன்! டி.வி. ஆசை காணாமற் போயிற்று!

ராஜு: அப்பா திடீர் திடீர்னு கட்சி மாறுகிறார்.

(பக்கத்து வீட்டுப் பத்மநாபன் எட்டிப் பார்க்கிறார்.)

பத்மநாபன்: டி. வி. வந்துட்டாப்போலே இருக்கு! இன்றைக்கு என்னவோ 'பூதம் காத்த புதையல்' என்கிற சினிமாவாம்!

பஞ்சாமிர்தம்: வாங்கோ! வாங்கோ! இங்கே பூதம் இருக்கு! புதையல் இருக்கு! ஆனால் இது வேறு புதையல்! பத்மநாபன் சார்!... இது புஸ்தகப்பெட்டி!... டி. வி. இல்லே. 'இரவல் கேட்காதே'ன்னு ஒரு அமெரிக்கன் ஆதர் எழுதியிருக்கார் பாருங்கோ! பிய்த்து உதறிவிட்டான்!

(பத்மநாபன் பதில் பேசாமல் போகிறார். பஞ்சாமிர்தம் புத்தகங்களை அடுக்குகிறார்.)



# ரூ. 6650 செலவிலே லண்டனில் பஸ் பிரயாணம் செய்வீர்.

## ரூ. 5850 செலவிலே சுவையான இத்தாலிய உணவு அருந்துவீர்.

## ரூ. 6590 செலவிலே ஸ்விட்ஸர்லாந்தின் குளுமையை அனுபவிப்பீர்.

## ரூ. 6600 செலவிலே மோனலிஸாவின் புன்னகையின் ரகசியம் அறிவீர்.

ரோம், ஜெனீவா, பாரிஸ்,-லண்டன்—எவ்விடமும் செல்வீர் அதுமட்டுமல்ல எங்கள் சுற்றுப்பயண எக்ஸ்கர்ஷன் கட்டணத்திலேயே வேறுபல இடங்களுக்கும் சென்றுவரீர்.

மிலன் ரூ. 6099 ப்ரஸ்ஸெல்ஸ் அல்லது ப்ராக் அல்லது வார்ஸா ரூ. 6600 ஐரோப்பாவுக்கான எல்லா எக்ஸ்கர்ஷன் கட்டணங்களுமே 14 லிருந்து 90 நாட்கள் வரை செல்லுபடி ஆகின்றன. தவிர வழியில் ஓரிடத்தில் தங்கிவிட்டுப்பயணம் தொடரலாம். இந்தியா யு.கே. கட்டணம் 21 லிருந்து 90 நாட்களுக்கு செல்லுபடி ஆகிறது. தவிர ரூ. 7350 செலவிலே வழியில் ஓரிடத்தில் தங்கிவிட்டும் பயணம் தொடரலாம். எல்லா எக்ஸ்கர்ஷன் கட்டணத்தின்படி பம்பாய்/டில்லியிலிருந்து பயணம் தொடங்க முடியும். கூடுதல் விவரங்களுக்கு உங்கள் டிராவல் ஏஜெண்ட் அல்லது ஏர்-இந்தியாவுடன் தொடர்பு கொள்ளுங்கள்.



# தேரா மானிடம் - தேருவதெவ்விடம்?





**கண்ணதாசன்**

மானிடச் சாதியும் மண்ணிற் பிறந்து
காலங்கள் பல கழிந்தன, அறிவோம்.'
தொல்காப் பியன்முதல் சோழன் சேரன்
பல்லவ நாடன் பாண்டியன் வரைக்கும்
ஆங்கி லேயரும் ஆற்காட்டு நவாபும்
கத்தியில் லாமல் கணக்கினை முடித்த
காங்கிர சாரும் கட்டிய ஆட்சிகள்
நடந்ததை அறியும் நமது தலைமுறை.
இத்தனை காலமும் இல்லாத மயக்கம்
இந்நாள் மானிடச் சாதியை இயக்கும்.
உண்மை அன்பு உயர்ந்த அறங்கள்
கற்றுத் தரும் ஓர் கடைச்சரக் காயின!
விற்றுத் தருவது விந்தைஎன் முனது!
தோன்றும் போதே சுடரொளி யாக
தோன்றும் மானிடம் தோற்றது எவ்விடம்?
பட்டணம் காட்டும் பரபரப் பாலும்
பல்வகை நாக ரீகப் படிப்பிலும்
கொட்டகை நிரம்பும் கூத்திலும் பாட்டிலும்
பண்டையப் பெருமைகள் பாழாய்ப் போயின.

தத்துவ ஞானச் சரித்திர மெல்லாம்
மெத்தைக் கடியில் விழுந்து கிடக்கவும்
புத்தி தராத புத்தகப் படிப்பில்
போதை மிகுத்து வாலிபம் போகவும்
என்னென்ன கூத்தோ! என்னென்ன கூத்தோ!
காதல் என்பதும் கண்ணியம் கெட்டது.
காசாசை அதும் கருணையை விட்டது
பெரியோர் சிறியோர் பேதம் ஒழிந்தது
அன்பு என்பதே அவதியில் விழுந்தது
ஆடுமா டுகள்போல் மானிடம் அலைந்தது
யாரைச் சொல்லி யாரிடம் சொல்லி
தேறுவ திந்தத் தேரா வாழ்க்கையை?
ஒருமணி நேரம் ஊமையாய் இருங்கள்
சிலமணிப் பொழுது செவிடாய் இருங்கள்
மூன்றுநா ழிகைகள் முடமாய் இருங்கள்
கூடுமான வரை குருடாய் இருங்கள்
ஒருநாட் பொழுது ஓடிக் கழியும்!
இப்படியே தினம் இருந்து கொண்டிருந்தால்
மரணம் வரும்வரை மனிதனும் வாழலாம்!







# "பதிலல்ல, நழுவல்!"

## —வீணை பாலசந்தர் கூறுகிறார்

கல்கி 4-2-79 இதழில் ''ஆட்சேபணையும் அதற்கு ஒரு பதிலும்'' என்ற தலைப்பில் வீணை ஸ்ரீ பாலசந்தர் அவர்கள் கடிதமும் அதற்குப் பதிலாக ஸ்ரீமதி அபயாம்பிகா அவர்கள் கடிதமும் பிரசுரமாகி யிருந்தன. அதைப் பார்த்து விட்டு வீணை பாலசந்தர் பின்வரும் கடிதத்தை நமக்கு எழுதியுள்ளார்:

''திணறிப் போன பாலமுரளிக்கு நேரிடையாகப் பதில் கூற ''பயம்.'' அதனால் ''அப'' யத்தை நாடினார் போலும்!

அந்த அம்மையாரின் கூற்றே அலாதி. அகாடமி மலரில் கட்டுரை இடம் பெற்றதாம்... அதை ஆதாரமாகக் கொண்டு கல்கியிலும் வெளியாகிற்றாம்! ஐயோ! ஐயோ! முழுப்பூசணிக்காய் கேஸ் அல்லவா இது? கல்கி இதழ் தேதியோ டிசம்பர் 17. அகாடமி ஆரம்ப தேதியோ டிசம்பர் 21. தேதிகள் இப்படி முன்பின் முரண்பாடாக இருக்கும் போது அகாடமி மலரைப் பார்த்து எப்படி கல்கி பிரசுரித்திருக்க முடியும்? இதிலிருந்து என்ன தெரிகிறது? அகாடமி மேல் இந்தப் பழியைத் தூக்கிப் போடுகிறார்கள் இப்போது.

வாழ்க்கைத் துணைவி எழுதியதை நீர் எப்படிப் பிரசுரித்தீர்? இந்தத் தேதிகள் முரண்பாட்டை நீரல்லவா முதலில் சுட்டிக் காட்டியிருக்க வேண்டும்?

நுனிப்புல் மேய்ந்து பாடுபவர்களிடம் நுணுக்கமாக நான் கேட்டுத் தெரிந்து கொள்ள எதுவுமில்லை. அது சரி, அம்மையாரே, ராகங்கள் பற்றி எந்த விதமான சரியான பதிலும் இல்லையே? ஒரே குழப்பம்! அதாவது - ஏனைய பத்திரிகைகள் மூலமாகவும் அகாடமி மலர் மூலமாகவும் சொல்வதை அளவில்லாமல் சொல்லி விடுவோம். அச்சில் வருவது வந்து விடட்டும். இந்தியாவெங்கும் உலகெங்கும் இந்தச் சாக்கில் பரவுவது பரவட்டும். அகாடமியினரை இதில் மாட்டி விட்டு விடுவோம். பிறகு யாராவது ஏதாவது கேட்டால் எப்படியாவது சமாளித்துக் கொள்வோம் - இதுதான் உங்கள் வாழ்க்கைத் துணைவரின் கொள்கையோ?

இதற்கு என்ன மறுபதில் வந்தாலும் என் வாழ்க்கைக்குத் துணைவியான மனைவி சாந்தாவைக் கூட ஏவி நான் எழுதச் சொல்ல மாட்டேன். இதோடு என் பணி முற்றிற்று.''

இந்தச் சர்ச்சை சம்பந்தமாகச் சில விஷயங்களைத் தெளிவு படுத்திவிட வேண்டியது கல்கி ஆசிரியர் என்ற முறையில் என் கடமையாகிறது.

(1) வீணை பாலசந்தரின் முதல் கடிதம் கிடைக்கப் பெற்றதும் அதற்குப் பதில் கூற பாலமுரளிக்கு ஒரு வாய்ப்புத் தர வேண்டும் என்று கருதினேன். நிருபரை அனுப்பினேன். பாலமுரளியின் வாழ்க்கைத் துணைவியார் ஸ்ரீமதி அபயாம்பிகா டெலிஃபோனில் என்னுடன் தொடர்பு கொண்டு பேசினார். பாலமுரளி சர்ச்சையில் ஈடுபட விரும்பவில்லை என்று கூறியதோடு பாலசந்தரின் கடிதத்தைப் பிரசுரித்துத்தான் ஆக வேண்டுமா என்றும் கேட்டார். ராகங்களைப் பற்றிய பல விளக்கங்களை ஃபோனிலேயே சொன்னார்.

பாலசந்தரின் கடிதத்தை என்னால் பிரசுரிக்காமல் இருக்க முடியாது என்றும் பாலமுரளி சார்பில் அபயாம்பிகாவே விளக்கம் தர விரும்பினால் செய்யலாம் என்றும் நான் கூறினேன். அதன் பின்னர் அபயாம்பிகா பதில் எழுதி அனுப்பினார்.

(2) பாலசந்தர் தமது இரண்டாவது கடிதத்தில் தேதி முரண்பாடு பற்றிக் குறிப்பிட்டுள்ளார். இதில் முரண்பாடு ஏதுமில்லை. கல்கி 17.12.78 இதழ் அச்சாகும் போதே அகாடமி மலருக்கும் வேலை தொடங்கி நடந்து கொண்டிருந்தது. பால முரளியிடம் எமது நிருபர் டிசம்பரில் போயிருந்த போது பாலமுரளி அவர்களே தம்மைப்பற்றிச் சில தகவல்களைத் தந்தார். அந்தத் தகவல்கள் ஆங்கிலத்தில் டைப் செய்யப்பட்ட கட்டுரை வடிவில் இருந்தன. கல்கியில் பிரசுரமான விவரங்கள் இந்தக் கட்டுரையின் அடிப்படையில் எழுதப்பட்டவைதாம். இதே விவரங்கள் அடங்கிய ஆங்கிலக் கட்டுரைதான் அகாடமி மலரிலும் பிரசுரமாகியுள்ளது.

(3) முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டிய விஷயம் அபயாம்பிகா தமது கடிதத்தில், ஹம்ஸ விநோதினி, பிரதி மத்தியமாவதி ஆகிய இரு ராகங்களையும் கச்சேரிகளில் பாலமுரளி Inspiration உண்டாகிப் பாடினார் என்று குறிப்பிட்டிருக்கிறார். அகாடமி மலரில் Creation என்று இருக்கிறது.

(4) ஆனந்த விகடன் இந்தச் சர்ச்சைகளில் ஸ்ரீமதி வசந்த குமாரியின் பெயரையும் சம்பந்தப்படுத்தியுள்ளது. கல்கி 17.12.78 இதழில் பாலமுரளி பற்றி ஸ்ரீமதி வசந்த குமாரி கூறியவை முதல் பாரா மட்டும்தான். அவர் சொன்னதாக அந்தப் பாரா மேற்கோள் குறிக்குள் பிரசுரமாகியுள்ளது. அத்துடன் அதை முடித்து விட்டு, நட்சத்திரப் புள்ளியிட்டு மேலே நாங்களே தருவதுபோல் பாலமுரளி பற்றிப் பல தகவல்களைத் தந்திருந்தோம். அத்தகவல்கள் மேலே குறிப்பிட்டது போல் பாலமுரளி அவர்களே நமது நிருபரிடம் தந்தவை. ஆகவே வசந்த குமாரிக்கும் இந்தச் சர்ச்சைக்கும் எவ்வித சம்பந்தமுமில்லை.

(5) இந்தச் சர்ச்சை பற்றிச் சரியான முடிவுக்கு வர, பாலமுரளியும் இசை உலக நிபுணர்களும் தாம் உதவ முடியும். முடிவு எவ்வாறாயினும் பாலமுரளி, பாலசந்தர் ஆகிய இருவரின் இசைத்திறனில் இசை உலகும் ரசிகர்களும் கொண்டிருக்கும் மதிப்பு குறைந்து விடப் போவதில்லை.

— ஆசிரியர், கல்கி

## 24. ஓ... ரங்கநாயகி!

தன்னையறியாமலும் பிறர்க்குப் புரியாமலும் கலங்கிய கண்களின் நீரை, தர்பாரில் பிறர் அறியத் துடைத்துக் கொள்வதே தனது ராஜரீகமான தோரணைக்கு ஓர் அவமானம் போலக் கருதி, இமைகளாலேயே அந்த நீர்த்திரையை ஒற்றி, விலக்கி ஒன்றுமே ஏற்படாதது மாதிரி காட்டிப் பொய்யான பாவனையுடன் உதடுகளை நீவிவிட்டு, ஒரு நடிகனைப் போலத் தன்னை முன்னிருந்த மெய்ப்பாட்டுக்கு ஆயத்தமாக்கிக் கொள்கிறான் திப்பு சுல்தான். தனது மகாலில் ஆடல் பாடல்களை நேமித்து அவற்றை ரசிப்பதிலும் ஆர்வம் காட்டுவதிலும் அவன் ஒரு மகா கலைஞனாயிற்றே! குறிப்பாக நாடகமென்றால், அதற்காக அவன் காட்டுகிற ஆதரவு, பெரிய சுல்தானு பேகத்துக்கே பல சமயங்களில் எரிச்சலை ஏற்படுத்தியிருக்கிறது. பல நடிகர்களும் கலாமேதைகளும் அவனால் நிறைவு கண்டு வாழ்ந்து வருகிறார்கள் என்றால், இந்தக் கண்ணீர் நாடகத்தை அவன் தனது பொய்யான பாவனையில் மறைத்ததில் வியப்பொன்றுமில்லை.

எதிரே சாஷ்டாங்கமாக விழுந்து கிடக்கும் மஞ்சுளா தேவியைப் பலரும் பல கணங்களேனும் கவனிக்கட்டுமே என்று மௌனமாகச் சோதிக்கிறான். ஆ! இந்த மஞ்சுளா தேவியின் மனக்குமுறல் எத்தகையது என்று எண்ணிப் பார்க்கிறான்; தர்பாரையும் எண்ணிப் பார்க்க அவகாசம் கொடுக்கிறான்..

பொதுவாகவே காதலானது...

பரிசுத்தமான பொய்மையின் தண்ணீரில் அரும்பி, பவித்திரமான உறவின் கண்ணீரில் மலர்ந்து, பலவிதமான தொல்லைகளுக் குட்பட்டுத் துன்பியலாய் முடிந்து, பன்னீர் மணக்க அமரத்துவமடைவதுதானே காவியக் காதல்...

காதலித்தவர்களுக்குத்தான் அதன் சூத்திரம் தெரியும்; வெறும் சோபனத்துக்காகக் கடிமணம் புரிந்து கொள்பவர்களுக்கு இதன் பதவுரை பொழிப்புரை தெரிய நியாயமில்லை.

ஒரு விநாடி ரங்கநாயகியை நினைத்துப் பார்க்கிறான்...

அடுத்த விநாடி, தரையில் விழுந்து நமஸ்கரித்துக் கொண்டிருந்த மஞ்சுளா தேவியை நோக்கி, ''போதும் எழுந்திரு மஞ்சு!'' என்கிறான்.

ஒருவித உணர்வில் தோய்ந்த பாசத்தின் பாற்பட்ட நிலையில் தனது துன்பியல் பாவனையைப் புதைத்து, அதை மீண்டும் உயிர் பெறச் செய்து தன்னிலையடைந்து எழுந்து கொள்கிறாள் மஞ்சுளாதேவி. கலங்கிக் குளமாயிருந்த கண்களை இடது கரத்தின் புறப்பாகத்தால் துடைத்துக் கொள்கிறபோது, அவளது உள்ளக் கேவலைத் தனதாக்கிக் கொண்டனபோல் வளையல்கள் குலுங்கி அழுகின்றன.

''மஞ்சு! உன்னை ஏன் இங்கு அழைத்து வரச் செய்தேன் தெரியுமா?'' என்று கூறி, எதை நினைத்தோ சற்றே தயங்கி, முதலில் திவான் சாகிப் மீர்சாதிக்கை நோக்கிப் பின்னர் சபையில் உள்ளவர்களைக் கவனிக்





கிறுன். சொல்லவந்ததைச் சொல்லி முடித்த பிறகு, இந்தத் திவான் சாகிப் மீர்சாதிக் மன்னிப்புக் கேட்க மறுத்து விட்டால்...

மறுக்குமளவுக்கு அவ்வளவு தைரியம் வந்துவிடப் போகிறதா? அதையும் பரிசீலித்துப் பார்த்துவிடலாமே என்கிற தீர்மான முனைப்புடன் சொல்ல வந்ததைச் சொல்லியே முடிக்கத் தொடர்ந்தான்:

''மஞ்சு, என் அருமை சகோதரி! உன் காதலன் பசவராஜ் எனது காதலியை — ரங்கநாயகியைப் பலாத்காரமாக அபகரித்துக் கொண்டு போனுன் என்பதற்காகப் பழிக்குப் பழி வாங்க உன்னைச் சிறையெடுத்து வர வில்லை. பாதுகாக்கவே உன்னை அழைத்து வரச் சொன்னேன். உன் காதலன் பசவராஜ் என்றைக்கு ஸ்ரீரங்கப்பட்டினத்துக்குத் திரும்புகிறுனே, அன்றைக்கு அவனிடம் உன்னைப் பத்திரமாக — ஒரு பொக்கிஷமே போல ஒப்படைப்பேன்! உன்னைத் தனியே விட்டு வைத்தால், எனது ரங்கநாயகிக்கு வந்த ஆபத்து உனக்கு வரும் என்பது, திவான் மீர்சாதிக் உன்னை வருணித்ததிலிருந்தே புரிந்து கொண்டேன். இதனை நான் இன்றுதான் புரிந்து கொண்டேன் என்பதல்ல; ஆர்க்காட்டை விட்டுப் புறப்படுகிறபோதே புரிந்து கொண்ட விஷயம் இது! இக்கணமுதல் நீ எனது அந்தரங்கத்துக்குரிய ஜனனாவில் தக்க பாதுகாவலுடன் சௌக்கியமாக இருப்பாயாக! உனக்கான சகல வசதிகளும் செய்து தர ஆணையிடுவேன்; உனது சைவ உணவுக்கு எத்தவித பங்கமும் நேரிடாது. இந்த லால் மகாலில் எவராவது உனக்குத் தீங்கு செய்ய நினைத்தால், அவரது நினைத்த நெஞ்சுக்குள் எனது வாள் சத்தியமாக நுழைந்துவிடும்! நினைத்தால் இப்படி; தீங்கே செய்து விடுவார்களேயானுல், இந்த லால்மகாலையே துகளாக்கி, உன்னைப் போட்டுப் புதைப்பேன்! இந்த எனது ராஜபிரகடனத்தை உனது முன்னிலையில் பறைசாற்றவே உன்னை இந்தத் தர்பாருக்கு வரவழைத்தேன்!''

மஞ்சுளாதேவி மெய்ம்மறந்து கண்களை மூடிக்கரம் கூப்புகிறுள். அவளது இமை மூடிய கண்களில் நீர்முத்துக்கள் வரிசை கட்டிச் சிந்துகின்றன.

நவாப் திப்புசுல்தானின் இந்தப் பிரகடனத்தைக் கேட்டு அந்த லால்மகாலின் சுவர்களும், தூண்களும், சித்திரங்களும்கூட நடு நடுங்கிப் போயினவென்றுல்...

மீண்டும் திப்புசுல்தானின் குரல் ஓங்கி ஒலிக்கிறது:

''திவான் மீர்சாதிக்! நோக்கத்தை விளக்கிய பிறகாவது நட்பத்தை உணருவீர்கள் என்று கருதுகிறேன்! மன்னிப்புக் கேளுங்கள்!''

அடுத்த விநாடியே...

எழுந்து நின்ற திவான் சாகிப் மீர்சாதிக், கொஞ்சமும் தயங்காது, பயத்தின் காரணமாகவோ அல்லது பதுங்கிப் பாய்கிற புலியின் தந்திர பாவனையின் காரணமாகவோ, ''மஞ்சுளாதேவி! என்னை மன்னிக்கவும்!'' என்று கூறி அமருகிற போது, பெருமிதத்துடன் கவனிக்கிறுன் நவாப் திப்புசுல்தான்.

''மகிழ்ச்சி, திவான் மீர்சாதிக்! தந்தையார் உத்தரவுப்படி யார் யாரைக் கூப்பிட்டு எழுதியிருக்கிறுரோ, அவர்கள் என்றைக்கு வேண்டுமானுலும் எப்போது வேண்டுமானுலும் புறப்படலாம். இந்த உத்தரவு எனக்குத் தேவையற்றது என்று நான் முதலில் நினைத்தாலும், அது தேவையே என்று நீங்கள் எதிர்பார்த்ததால் அளிக்கிறேன். நீங்கள் அனைவருமே புறப்படுவதால் ஸ்ரீரங்கப்பட்டினத்துக்கு எந்தவித அபாயமும் நெருங்கிவிடப் போவதில்லை. இந்தத் திப்புசுல்தான் ஒருவனே போதும்! அவனை அசைத்துப் பார்க்கிற வல்லாதிவல்லவன் இன்னும் பிறக்கவில்லை என்று எனது நண்பன் பசவராஜ் எப்போதோ கூறியதை இப்போது நினைத்துப் பார்க்கிறேன்; நினைவும் படுத்துகிறேன்!''

நவாப் திப்புசுல்தானின் குரலில் ஒரு நியாயமான — தன்னிறைவு புரிந்த சுயம்புவான அகங்காரம் ஒரு தன்னம்பிக்கையே போன்று எதிரொலிக்கிறது...

சற்றைக்கெல்லாம் தர்பார் கலைந்தது.

அரியணையிலிருந்து எழுந்து, நடந்து வந்து, மஞ்சுளாதேவியை ஒருமுறை நோக்கி, ''எந்தவித பயமோ, தயக்கமோ இன்றி இங்கே நீ தைரியமாக ஒரு மகாராணிபோல உலவி வரலாம். உனது சுதந்திரத்துக்கு இங்கே ஊர்ந்துசெல்லும் சிற்றெறும்புகூடப் பங்கம் விளைவிக்க நினைக்காது; நினைக்கவும் கூடாது'' என்று கூறுகிறபோது, ஆ! இவன் தான் திப்புசுல்தானே என்று சில நெஞ்

---

''போராட்டத்தினுல் கொஞ்சம் கலாட்டா நடந்தது நிஜம்தான். ஆனுல் மூன்று நாட்களுக்கு இந்த ஊரில் வேலை இல்லாத திண்டாட்டத்தைப் போக்கினுேமே என்று பெருமைப்படலாம். கரெக்ட்டாக எல்லோருக்கும் பணமும் கொடுத்து விட்டோம்.

- எஸ். பத்மாவதி



சங்கள் நினைத்துப் பெருமிதப்படத்தான் செய்தன.

கொஞ்ச நேரம் தயங்கி நின்ற மஞ்சுளா தேவி, ''நான் உங்களை ஒன்று கேட்கலாமா அண்ணா!'' என்றாள்.

''தாராளமாகக் கேள் மஞ்சு!''

''அவரை — உங்கள் நண்பரை நீங்களும் சந்தேகிக்கிறீர்களா என்பது உங்கள் பேச்சிலிருந்து என்னால் தெளிவாகப் புரிந்து கொள்ள முடியவில்லை.''

சில விநாடிகள் வரை உற்றுக் கவனித்த திப்புசுல்தான், ''சத்தியமாகச் சந்தேகிக்கவில்லை சகோதரி! எனது காதலியை நானறிவேன்; அவளைவிட எனது ஆருயிர் நண்பனை மிகமிக நன்றாக அறிவேன்!'' என்று கூறுகிற போது, அவனது கண்கள் நன்றாகவே கலங்கிவிட்டன. ஆனால் அந்த வார்த்தைகளைத் தொலைவிலிருந்தும் மறைவிலிருந்தும் செவிமடுத்தனரிருவர்..

கதி கலக்கம் கண்டு பீதியடைந்தனர்.

அன்றையப் பகல் உணவை வழக்கம் போலவே அறிவு ஜீவிகளுடன் கலந்துண்டான் திப்புசுல்தான். பக்கத்தில் பெரிய குமாரனையும், மடியில் இரண்டாவதாகப் பிறந்த — ருக்கய்யபானு பெற்றெடுத்த சிறிய குமாரனையும் அமர்த்திக் கொண்டு அவன் உணவு உண்ணுவதைத் தொலைவிலிருந்து பெரிய சுல்தானுபேகம் பக்ருன்னிஸாவும், ஏனைய ருக்கய்ய பானு, ரோஷனு பேகம், பேகம் சுல்தானு ஆகிய மனைவிமார்களும் கவனித்து மகிழ்ந்தனர்.

ஓ... திப்பு, தனது கவலையிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாக விடுபடுகிறான்; போகப் போகச் சரியாய்ப் போய்விடும் என்று நிறைவு கொள்கிறான் அன்னை பெரிய சுல்தானுபேகம் பக்ருன்னிஸா.

உணவு முடிந்ததும் நேரே ஜனானாவை நோக்கி நடந்தான் நவாப் திப்புசுல்தான்; வழக்கமாக உண்டதும் ஓய்வு கொள்வது அல்லது உறக்கம் கொள்வது அவனது பழக்கம். அதற்கு முரண்பட்டு ஜனானாவை

நோக்கிச் சென்றது பலருக்கும் விழி பிதுங்கும் ஆச்சரியத்தை விளைவித்தது.

நவாப் திப்புசுல்தான் வருகையறிந்து ஜனனு, அமைதி கண்டு, ஒதுங்கிப் பதுங்கிப் பார்வையிடுகிறது...

போகிற வழியிலேயே பணிப்பெண்ணிடத்து மஞ்சுளா தேவியைக் குறித்துக் கேட்டுத் தெரிந்து கொள்கிறன். அவனது கண்காணிப்பின் ஆரம்பமாக அது தெரிகிறது...

தனக்கென அளிக்கப்பட்ட அறையில் அது வரை குப்புறப்படுத்துக் கொண்டு கண் கலங்கியவாறிருந்த மஞ்சுளாதேவி, திப்புவின் வருகையறிந்து, கண்களைத் துடைத்துக் கொண்டு எப்போதும் போல இருப்பவள் மாதிரி பாவனை செய்தாள். திப்புசுல்தான் உள்ளே நுழைந்ததும் எழுந்து நின்றாள்.

எதிரே இருந்த ஆசனத்தில் அமர்ந்த திப்பு, மஞ்சுவைக் கூர்ந்து ஆழத்துடன் பரிசீலித்து, ''மஞ்சு! சாப்பிடவில்லையாமே! ஏன்?'' என்று கேட்கிறபோது, அவனது குரலில் வெளிப்பட்ட கரிசனம், அன்பிலிருந்து பிரிந்த இழைபோலத் துளிக்கிறது...

''சாப்பாடு பிடிக்கவில்லை.''—மஞ்சுளா தேவி தனது தலையை நிமிர்த்தாமலேயே









மெல்லிதான குரலில் இவ்விதம் கூறியதும், அவளைத் தொடர்ந்து திப்புசுல்தான் பேசினன்:

''காதலனுடைய பிரிவால் இந்த உண்ணு விரதம் என்று என்னல் சொல்ல முடியாது. ஏனென்றால், அந்தச் செய்தி, பரவி, ஆறு மாதங்களுக்கு மேலாகிறது! ஆகவே, உனது உண்ணுவிரதத்துக்கு வேறு காரணம் இருக்க வேண்டும்!''

இப்போதுதான் நிமிர்ந்து நோக்கிக் கவனிக்கிறள் மஞ்சுளாதேவி.

''என்னைவிடவா நீ காதலில் துன்பப்படுகிறய் மஞ்சு! நீ வெளியில் காட்டிக் கொள்ளுகிறய்; நான் உள்ளூற ரகசியமாகக் குமுங்கிக் கண்ணீர் மல்குகிறேன். எனது ரங்கநாயகி இல்லாத ஒவ்வொரு கணமும் நான் அணு அணுவாக எவ்வளவு சித்திரவதைப்படுகிறேன் தெரியுமா?''

திப்புசுல்தான், தனது கைக்குட்டையால் கண்களைத் துடைத்துக் கொள்வதைக் கவனித்த மஞ்சுளாதேவி, தனது துயரங்களெல்லாம் வெடிப்பன போல விசும்பியழத் தொடங்கிவிட்டாள்.

'ஆ! கொஞ்ச நேரத்தில் எவ்வளவு பலவீனனய் விட்டேன்?' என்று எண்ணிப் பார்த்த திப்புசுல்தான், ''மஞ்சு, விரைவில் நான் எனது காதலியை அடைகிறேனே இல்லையோ? உனது காதலனை எப்படியும் கண்டு பிடித்துக் கொண்டுவந்து அவனுக்குப் பல ஜாகீர்களை வழங்கி இந்த எனது ஆட்சியின் புதிய திவானுக்கு, உன்னை மணம் செய்வித்து ஆசிர்வதிப்பேன்! இது என் ஆண்டவன்மீது சத்தியம்! இனியும் நீ சாப்பிட மறுப்பாயேயானல், நீ என்னை அவமானப்படுத்துவதற்கு ஒப்பாகும். உனக்காகவே தனியான இடத்தில் பிராமணர்களைக் கொண்டு, சமைத்து, ஒருவரை ருசி பார்க்கச் செய்து, அது தீங்கற்ற உணவுதான் என்று பரிசீலித்து, பின்னர்தான் கொண்டுவர வேண்டும் என்று ஆணை பிறப்பித்த இந்தச் சகோதரன், உனது நலனில் எத்தனை அக்கறை கொண்டிருக்கிறன்! போய்ச் சாப்பிடு மஞ்சு!''

மஞ்சுளா தேவி, தனது சேலைத் தலைப்பில் கண்களைத் துடைத்துக் கொள்கிறள்.

''பசவராஜின் தாயைப்பற்றி உன்னை விட எனக்கு அக்கறை அதிகம். வேண்டிய காவலையும் சௌகரியங்களையும் செய்து தந்திருக்கிறேன்.''

ஓ... திப்பு சுல்தானின் செயல், மானுஷ்யத்தின் எல்லையில் நிற்கிறது...

மஞ்சுளா தேவிக்கு என்ன பதில் சொல்வதென்றே புரியவில்லை. அவள், இரு கரம் கூப்பி வணங்குகிறள்.

மெல்லத் தன்னுணர்வடைந்து தன் நிறைவு கண்டு, தன்னுள் ஒரு தீர்மானத்துடன் சாப்பிடச் சென்றள் மஞ்சுளா தேவி. திப்புசுல்தானிடம் அவளுக்குப் பரிபூரண நம்பிக்கை விழுந்துவிட்டுப் பூமியைத் தொட்டது.

**மா**லைவரை ஓரளவு ஓய்வு கண்ட பின்னர், நவாப் திப்புசுல்தான், தொழுகையை இனிது முடித்துத் தனது திடகாத்திர [illegible] வெண்புரவியில் ஆரோகணித்துப் புறப்

படுகிறான். அவன் அவ்விதம் துணையின்றிப் புறப்படுவது சரியில்லை என்பதை உணர்ந்த, அவனது அந்தரங்கச் செயலாளன் ஹபீபுல்லா, மிகவும் ரகசியமாகத் தன்னுடன் சில வீரர்களை அழைத்துக் கொண்டு பின் தொடர்ந்தான். திப்புவின்பால் அன்பு கொண்ட எவரும் ராஜ விசுவாசத்தின் அர்த்தங்களாய்த் திகழ்ந்தனர். சற்று நேரத்தில் திவான்களும் சில அதிகாரிகளும் ஹைதர் அலியின் படைமுகாம் நோக்கிப் புறப்படவிருக்கிறார்கள் என்பது பற்றிக்கூட, அக்கறை கொள்ளாமல் இளைய சுல்தான் எங்கு புறப்பட்டுச் செல்கிறார் என்பதில் மிகவும் கவனமாகவும் எச்சரிக்கையாகவும் இருந்தான் ஹபீபுல்லா.

வெண்புரவியை வேகமாகச் செலுத்திச் சென்ற திப்புசுல்தான், நேரே அந்தப் பாழடைந்த மண்டபத்தை நாடிச்சென்று, பல நிமிடங்கள் வரை அப்படியே மலைத்துக் கவனிக்கிறான்.

இடிந்துபோன தூண்கள்; ஓரியாக நின்ற பாவை விளக்கு; ஊளியாகிப் போனது போன்ற பின்னணி...

தனது இதயமாகிய மண்டபம் ஆர்க்காட்டிலேயே சிதிலமாகி விட்டதையுணர்கிறபோது அவனது கண்கள் பனிக்கின்றன.

குதிரையை விட்டிறங்கி மண்டபத்தை நோக்கி நடக்கிறான். பற்பல நினைவுகள்...

பாவை விளக்கை ஏற்றலாமா என்று அருகில் சென்று கவனிக்கிறான்.

காய்ந்து கருகிப் போன திரிதானிருக்கிறது....

ரங்கநாயகி அந்தத் திரிமுனையில் ஒளிச்சுடராய் நின்று சிரிக்கிறாள்...

எங்கிருந்தோ சிரிப்பொலி கேட்கிறது. கூர்ந்து கவனிக்கிறான்...

மீண்டும் அதே சுநாதம் நிறைந்த ரங்கநாயகியின் சிரிப்பொலி...

அந்தச் சிரிப்பொலியினூடே அவள் அடிக்கடி அன்பால் அழைக்கும் 'மன்மத சாகிப்' என்ற சொல், ரதிகல்தாரு குரல் போலக் காதுகளில் ரீங்கரிக்கின்றன...

ஓ... எல்லாமே வெறும் பிரமை...

அந்த மண்டபத்தில் அவர்கள் பேசிய பேச்சுக்கள், செய்து மகிழ்ந்த மாசற்ற குறும்புகள், குதூகலித்த சிரிப்பொலிகள், தையாண்டி நிகழ்ச்சிகள்...

கண்முன் கனவாய், கவிதையாய், கவின்மிகு சித்திரமாய் விரிகின்றன...

''ஓ... ரங்கநாயகி!'' என்று ஓங்கி வானை முட்டுமளவுக்கு இரையலாமா என்றும் பைத்தியம் பிடித்தவன் மாதிரி நினைத்துப் பார்க்கிறான்...

கத்திப் பார்த்தால்தான் என்ன?

அப்போதாவது மனப்பாரம் — தாங்க முடியாத சுமை — காதலின் பளு சற்றேனும் குறையாதா என்கிற ஏக்கம்; எதிர்பார்ப்பு...

அவன் அவ்வாறு அவளது திருநாமத்தைச் சத்தமிட்டு முழக்க எண்ணுகிறபோது...

ஸ்ரீரங்கநாதர் கோயிலின் அந்திக்காலப் பூஜையின் மணியோசை...

டாங், டாங், டாங்... (தொடரும்)




''எவ்வளவு பெரிய செயின் ஸ்மோக்கரும், சிகரெட் பழக்கத்தை விடறதுக்கு ஒரு வழி இருக்கு.''

''என்ன அது?''

''கடைசியா சிகரெட்டை அணைக்கிறபோது, செருப்பைக் கழட்டிட்டு மிதிக்கிறதுன்னு வைச்சுக்கணும்.''

வ. தேனப்பன்.

★

''அம்பயருக்கு ஏன் எல்லோரும் மாலை போடறாங்க''

''நோ-பால்ஸ் - 'எக்ஸ்ட்ரா' ரன்கள் 100 ஆகிவிட்டதாம். அதற்காகத்தான்.''

எஸ். சந்திரசேகர்.

★

ஆசிரியர்: உங்க பையன் பெரிய 'ஆல் ரவுண்டர்' ஸார்!

மற்றவர்: பலே... பலே...! கிரிக்கெட்டிலேயா?

ஆசிரியர்: அது ஒன்னுதான் குறைச்சல்! போன 'மந்த்லி டெஸ்டில்' எல்லாப் பாடங்களிலுமே 'முட்டை'தான் வாங்கியிருக்கான்!

மேலூர் வைத்தியநாதன்.

★

சைக்கிளில் வந்தவர்: உங்களோடு பேசிக்கிட்டிருந்ததில் மூன்று மணிநேரம் போனதே தெரியலே!

அரசியல்வாதி: ரொம்பவும்தான் புகழுறீங்க! என்னாலே ஆக வேண்டியது ஏதாவது இருந்தா அப்ப வந்து சொல்லுங்க!

சைக்கிளில் வந்தவர்: இப்போதைக்கு ஒரு 60 பைசா மட்டும் கொடுங்க. மூன்று மணிநேர வாடகை சைக்கிள் கம்பெனிக்குக் கொடுக்கணும்!

மேலூர் வைத்தியநாதன்.

★

'லஞ்ச' சாப்பிடும் கிளார்க்கிடம்

ப்யூன்: சார், இன்னிக்கு டிபனுக்கு ரொட்டி கொண்டு வந்திருக்காப்பலே இருக்கு. ஒரு துண்டு கொடுக்கறீங்களா?

கிளார்க்: ஏன், நீ டிபன் கொண்டு வரலையா?

ப்யூன்: அதுக்கில்லே இங்க கொட்டிப் போச்சு. தூக்கி எடுக்கணும்!

வெ. சீதாராமன்.



இன்னிக்கு எம் பெண்ணுக்கு எட்டாவ தாவோ பத்தாவதாவோ நடக்கற 'பெண் பார்க்கும் படலம்'

பிள்ளை வீட்டுக் காராதான்... வந்து எறங் கினு... பிள்ளை பாக்கறதுக்கு ராஜா மாதிரி இருந்தான். நல்ல வாட்டசாட்டம். மூக்கின் கூர்மையில் புத்திசாலித்தனம் 'பளிச்'சிட் டது.

''வரணும், வரணும்... ஹி. ஹி... ட... பார்வதி.. இவாள்ளாம்... வந்துட்டா பாரு'' அசட்டுச் சிரிப்பு அது கூடவே பெண்டாட் டியை அதட்டறது, இதெல்லாம் பொண்ணைப் பெத்தவாளுக்குச் சொல்லியா தரணும்?

'லீலா' அது தான், என் பொண், வந்த வாளையெல்லாம் ஒரு தடவை நமஸ்கரிக்க எந்திருக்கறு. அதெல்லாம்தான் அவளுக்கு ரொம்பப் பழக்கப்பட்டுப் போன தாச்சே...

திருப்திகரமான டிபன், காப்பியை வயத் துலே எறக்கினப்பறம், மெல்லிய ஏப்பம் ஒண்ணை விட்டுட்டு, பிள்ளையோட அப்பா நிமிர்ந்து ஒக்காந்துக்கறர். மென்மையான கம்பீரத்வனியில் ஒலிக்கறது 'லீலா'வின் ஆரபி ராகக்கீர்த்தனை. அவர் 'ஆஹா'காரத்துடன் தொடையில் தாளம் போட ஆரம்பித்து விட்டார். பையன் கூட லேசாகத் தன் 'பூட்ஸ்' காலிலும் மெல்லத் தாளம் போடு வதை ஜாடையாகக் கவனிச்சேன்.

பொண்ணைப் பத்தின அபிப்பிராயம் அவர்கள் மூவரது முகத்திலும் பூரண திருப்தி யுடன் நிலவியிருப்பதை என்னுலே பாக்க முடிஞ்சுது. ஆனு.., எந்தப் புத்துலே எந்தப் பாம்பு இருக்குமோ யார் கண்டா? எடம் பெரிய போடு. ஏகப்பட்ட ஆஸ்தி பாஸ்தி இருக்கறவா. கையிலே எத்தனை கேட் பாளோ. பையன் டபுள் க்ராஜுவேட் வேறு. ஒரே பையன் வேறே. கேக்கணுமா? இத்தனை கேள்விகளும் ஒரே சமயத்தில் என் மண் டைக்குள் குடைந்து கொண்டிருந்தன.

ரகுவோட அம்மா சுவாரஸ்யமா ஏதோ பேசிண்டிருந்தா. இல்லே... கேட்டுண்டு இருந்தா, லீலுவும் வெக்கத்தோட ஏதோ பதில் சொல்லிண்டிருந்தா.

ரகுவோட தாயார் எதேச்சையாக என் பக்கம் திரும்பவே, நானும் அவளைப் பார்க் கும்படி நேரிட்டது. ஓ... அந்த முகம், எங் கேயோ பாத்த மாதிரி நெனவு. நெஞ்சிலே நெரடறது. ஆனு... நெனவுக்கு வர மாட் டேங்கறது. புருவ முடிச்சுக்களை விரலால் நெருடிக் கொண்டே யோசனை செய்தேன். ஆ... நெனவுக்கு வந்து விட்டது. அவளுக்கும் அதே மாதிரி என்னை அடையாளம் தெரிஞ் சிருக்க வேண்டும். ஒரு புன்னகை அவளது இதழோரத்திலிருந்து வெடிக்கப் பொறப் பட்டது. அது கேலிப் புன்னகையா அல்லது



வருத்தத்தோட வந்த சோகப்புன்னகை யான்னு என்னுலே புரிஞ்சிக்கவே முடியலே.

அதுக்கப்புறம் என்னுலே அங்கு நடந்த சம்பாஷணையிலே கலந்துக்கவோ அல்லது மேற்கொண்டு நடக்க வேண்டிய காரியங்களிலே ஈடுபடவோ முடியவே முடியாதுன்னு தோணித்து. 'ஏன்'னுக்க, இவா என் பொண்ணைப் பண்ணிப்பாங்கிற அல்ப சொல்ப நம்பிக்கையும் தவிடு பொடியா விடுத்தே.

வந்தவாளெல்லாம் கிளம்பிப் போயாச்சு. நான் என் ரூமுக்குள்ளே போய்க் கதவை மூடிண்டேன். ரூமிலே சூழ்ந்திண்டிருக்கிற இருட்டு எனக்கு வாய் விட்டு அழறதுக்குத் 'தோதா'க இருந்துது.

ஒரு முப்பது வருஷத்துக்கு முன்னுடி இருக்குமா! இருக்கும், இருக்கும். இன்னைக்கு ரகு வந்தானே, அதே மாதிரிதான் நானும் என்னோட அப்பா, அம்மாவோட அந்த வீட்டுக்குள்ளே நொழைஞ்சேன். ரொம்பச் சாதாரண குடும்பத்தவா இருக்கற ஓட்டு வீடு தான். பழைய வீடா இருந்தாக் கூட எத்தனை தூய்மையா வெச்சிண்டிருந்தா அதை? அந்த எளிமையிலும் ஓர் அழகு தெரிஞ்சுது நேக்கு.

அவாளோட வசதிக்கு மீறியே எங்களுக்குத் தடபுடலான உபசாரங்களெல்லாம் நடந்துது. என்னோட அப்பா, அம்மாவுக்கு இந்தச் சம்பந்தத்துலே அத்தனை இஷ்டம் இல்லே தான். ஆனு, தரகர் சுப்புணி ஆயிரம் தடவை வற்புறுத்தியதனுலோ என்னவோ வரத்துக்குச் சம்மதிச்சா.

கடைசியா பொண் வந்து எங்களை நமஸ்கரிச்சா. பொண்ணு அது? 'பொண்ணு'...ன்னு சொல்றதை விட 'தேவதை'ன்னு சொன்னுத்தான் பொருத்தமா இருக்கும்! எங்களை ஒரு தரம் 'லேசா' நிமிர்ந்து பாத்தா ஆ... அந்தக் கண்கள் கடல் மாதிரி எத்தனை விசாலமா, உலகத்தையே தனக்குள்ளே ஆகர்ஷிக்கிற மாதிரி — இருந்தன!

'இவ தாண்டா நோக்கு ஏத்தவ'ன்னு என்னோட உள்மனம் ஆர்ப்பரிச்சுது. வெச்ச விழி வாங்காமே அவளை நான் பாத்துண்டே, என்னோட இருதயத்தை அவ காலடிலே சமர்ப்பிச்சுட்டேன். அதுக்கப்புறம் நான் நானுக இல்லே.

எனக்கோ எக்கச்சக்க ஆஸ்தி இருந்தது. ஒரே பிள்ளை வேறே. என்னோட திறமைக்கு 'நான்' 'நீ'ன்னு போட்டி போட்டுண்டு வேலை கூப்பிட்டுக் குடுப்பாங்கிற அளவுக்கு என் திறமை மேலே நேக்கு அத்தனை நம்பிக்கை இருந்தது. பணத்தை நான் ஒரு நாளும் ஒரு பொருட்டா நெனச்சதில்லே. ஆனு,



எங்க அப்பா, அம்மா இருந்தாளே, அவா ஒரு மாதிரி. பணம், பணம், பணம். அது ஒன்னு இருந்துட்டாப் போதும் அவாளுக்கு. வேறே ஒன்னுமே வாண்டாம். சாந்தாவோட அப்பா கிட்டே வாய் கூசாமே, பத்தாயிரம் கையிலே கேட்டுட்டு, அதைத் தவிர சீர் பட்டியலைத் தனியாக நீட்டினபோது, அந்தக் கிழவர் கண்ணுலே நீர் தளும்ப வாய் குழற நின்னுண்டிருந்த அந்தக் காட்சி இன்னும் நினைவுக்கு வரது நேக்கு. 'அம்மா, நீ அன்னிக்கு அவரை அப்படித் துச்சமா கேட்டேயேம்மா. இப்போ நானே அவரோட நெலையிலே இருக்கேனேம்மா!' என்று வாய் விட்டு அழணும் போலே இருக்கு.

கடைசியிலே, அந்தப் பெரியவர் பாதித் தொகையைக் கல்யாணத்துக்கு மின்னாடியும், மிச்சப்பாதியைக் கல்யாணத்துக்கு முந்தின நாள் தருவதாகவும் ஒத்துக்கறார். அப்பாவும் அம்மாவும் அரை மனசோட அதுக்குச் சம்மதிச்சா. சாந்தாவை ஒரு தடவை திரும்பிப் பார்த்துட்டு அப்பா, அம்மாவைப் பின் தொடர்ந்தேன். அவளும் என்னை நம்பிக்கையோட விழியசங்காமல் பார்த்தாள். அவளுக்குத்தான் எம்மேலே எத்தனை நம்பிக்கை!

முகூர்த்த நாள் நெருங்கிண்டே வந்தது. நெலை கொள்ளாமே தவிச்சேன்.

இதோ, ஜானவாஸ நாள் வந்தது. ஜாடையா பொண் வீட்டுக்காரா தங்கியிருந்த இடத்தை நோட்டம் விட்டேன்.

## சிகப்புக்கல் மூக்குத்தி

நம்மிடையே வழங்குகிற ஒரு சொல் — 'யாருக்கப்பா காது குத்துகிறாய்?' என்பது. அதை மாற்றி அமைக்க மூக்குக் குத்தப் பார்க்கிறார் கவிஞர் கண்ணதாசன்.

ஸாரி,
சிவப்புக்கல் மூக்குத்தி ஜ்வலிக்கவில்லை! —கௌசிகன்



சாந்தா, ஓ, அந்த அலங்காரத்துலே எப்பிடி இருந்தா தெரியுமா? என் கண் திருஷ்டியே பட்டுடும் போல் தோணித்து.

அந்த இன்ப மயக்கம் ஒரு நிமிஷம்தான் நீடிச்சுது. அங்கே... 'திடீர்'ன்னு ஒரு இரைச்சல். என் பின்னாடி 'வைத்தா' மாமா, அப்பா, அம்மா எல்லாரும் நின்னுண்டிருந்தா. ''கழட்டுடா மாலையை, ஒரு க்ஷணம் கூட இங்கே நிக்கப்படாது. பொண் வீட்டுக்காரா நம்பளைச் 'சோணகிரி'ன்னு நெனச்சுண்டுட்டாப் போலிருக்கு.'' வைத்தா மாமா மேலே மேலே எறஞ்சுண்டே போனார்.

சாந்தாவோட அப்பா — கண்ணுலே நீர் தளும்ப, என் சாண் ஒடம்பை ஒரு சாணாக் குறுக்கிண்டு, மாமா கையைப் பிடிச்சுண்டு கெஞ்சினார். ''பெரிய மனசு பண்ணி எம் பொண்ணை ஒத்துக்கணும். நான் பண்ண தப்புக்கு எம் பொண்ணைத் தண்டிச்சுடாதேங்கோ. இன்னும் ரெண்டு மாசத்துக்குள்ளே எப்படியாவது அந்தத் தொகைக்கு நான் ஏற்பாடு பண்ணிடறேன்.''

''ஓய், கல்யாணத்துக்கு மின்னாடியே எங்க கைக்கு வராத பணத்தை, உம் பொண் கழுத்து மேலே தாலி ஏறினப்பறம் நீர் எங்களுக்கு அந்த ஐயாயிரத்தைக் கொடுப்பீர்ன்னு எப்படிங்காணும் நாங்க நம்பறது?'' என்று வைத்தாமாமா இறுமாப்போடு பேசினார். தம் வயது, அந்தஸ்து, குடும்ப கௌரவம் எல்லாத்தையும் விட்டுட்டு அந்தக் கெழவர் கெஞ்சினதுதான் மிச்சம்.

மாலையும் கழுத்துமா இருந்த என்னை ஆங்காரத்தோடே வலுக்கட்டாயமா இழுத்துண்டு போனார். அப்போ என்னாலே தைரியமா ரெண்டு வார்த்தை பேச முடிஞ்சுதா என்ன?

அதுக்கப்புறம் நடந்தகதையே வேறே. நான் என் மனசாட்சியோட நடத்தின போராட்டத்தில் அனேக தடவை தோத்துப்போனேன். அம்மாவோட கண்ணீர் பாணத்துக்கு முன்னாலே என்னாலே ஒன்னுமே பண்ண முடியல்லே. 'நெல்லிக்குப்பம் மிராசோட ஒரே பொண்ணுடா, எக்கச் சக்க ஆஸ்தி வேறே'ன்னு வாயைப் பொளந்து, 'பார்வதியை நேக்கு அடுத்த முகூர்த்தத்திலேயே நிச்சயம் பண்ணிட்டா. என் மனசு ஊமையாக ரத்தக் கண்ணீர் வடிச்சிண்டிருக்கும் போதே, பாரு கழுத்திலே கர்மயோகி மாதிரி மூனு முடிச்சுப் போட்டேன். எத்தனை எத்தனையோ ராத்திரிகள் சாந்தாவோட சோகம் கப்பிய மொகம் எம் முன்னாலே தோன்றித் தோன்றி, சித்ரவதை செய்ய, மௌனமா அழுதுண்டே தலைகாணியை நனைச்சிருக்கேன். அம்மாவுக்கு என்ன வந்தது?

அப்பா தன் ஆஸ்தியையெல்லாம் 'ரேஸ்' 'குடி'ன்னு கரைச்சுண்டு நின்னார். என்னோட வேலையையும் விட்டுட்டு, (மாமனார் வீட்டு ஆஸ்தி வந்த தைரியம்) இருந்த பணத்தையெல்லாம் சிநேகிதன் ஒருத்தனைக் கூட்டுச் சேத்துண்டு 'பிஸினெஸ்'ன்னு ஒன்னை ஆரம்பிச்சேன். அவனோ இருக்கறதையெல்லாம் சுருட்டிண்டு தலைமறைவாப் போயிட்டான். நான் கையிலே ஒத்தப் பைசா கூட இல்லாமே நின்னப்போ, அப்பா,

அம்மா, ரெண்டு பேரும் அதிர்ச்சி மேல் அதிர்ச்சி ஏற்பட்டதைத் தாங்காமே ஒத்தரை ஒத்தர் தொடர்ந்து போய்ச் சேந்தா. நேக்கு ரெண்டு, மூணு கொழந்தைகள் இருந்தது.

கார்த்தாலே ரொம்ப சுருக்காவே முழிச்சுண்டுட்டேன். தூங்கினாத்தானே முழிச்சுக்க. ஆபீஸ் வேலைகளிலே என்னை மூழ்கடிச்சுண்டு என் மனசிலே நடந்துண்டிருந்த போராட்டத்தை மறக்கப் பார்த்தேன். 'டேபிள்'லே வெச்சிருந்த 'டெலிஃபோன்' அலறித்து. காதிலே பொருத்திண்டு ''யெஸ், நடராஜ் ஸ்பீக்கிங்'' என்று கூறிப் பதிலை ஆவலோடு எதிர்பார்த்தேன்.

''ஹலோ, நான்தான் ரகு பேசறேன். 'யாரு'ன்னு தெரிஞ்சிண்டிருப்பே'ன்னு நெனைக்கறேன். அப்பா ஆபீஸ் விஷயமா வெளியூர் போயிருக்கார். இன்னிக்கு முடிஞ்சால் மாமியையும் கூட்டிண்டு எங்காத்துக்கு வரமுடியுமான்னு அம்மா ஒங்களுக்கு போன் பண்ணிக் கேக்கச் சொன்னா.'' நல்ல ஆண்மை 'கரகரப்பு' நெறஞ்ச குரல். அதில் தொனித்த கம்பீரம், அவன் பதவிசாகப் பேசிய முறை எல்லாத்துலேயும் மயங்கிப் போய் மெய் சிலிர்த்துப் போனேன். ''ஓ. இவன் மட்டும் நம்ப வீணாவைப் பண்ணிண்டான்னாக்க.'' நினைவே இனிக்கது. இல்லே... இல்லே... அப்படி நெனச்சுப் பார்க்க எனக்கு என்ன தகுதி இருக்கு?

''ஏன் சார் வரதுக்குச் சௌகரியப்படாதா?'' மீண்டும் ஒலித்த அவனது குரல் 'மெத்' என்று வருடிக் கொடுத்து என்னைத் தட்டி எழுப்பியது. ''நோ... நோ... அப்படியில்லே. 'வித் ப்ளஷர்' கண்டிப்பா வரேன்!'' தேவலேயே! என்னாலே கூட எப்பிடி நாக் குழறாமல் பேச முடிஞ்சுது?

ஆத்துக்கு வந்து விஷயத்தைப் பாருவிடம் சொன்னதும்தான் தாமதம். அவளுக்கு வாயெல்லாம் பல்லாகி விட்டது. அப்பவே அந்தப் பையன் தன் பொண்ணுக்கு நிச்சயம் ஆயிட்ட மாதிரி. ஆனா, நான் எந்த நெலேலே இருக்கேன்னு அவளுக்கு எப்பிடிப் புரிய வைக்கறதுன்னே தெரியாமே முழிச்சிண்டு இருந்தேன். எந்த மூஞ்சியை வெச்சிண்டு அவாளைப் போய்ப் பாக்கறது?

மனசை ஒரு மாதிரியா தேத்திண்டேன். பாருவையும் கூட்டிண்டு, 'ஆட்டோவைப்' பிடிச்சுண்டு அவாத்துக்குப் போய்ச் சேந்தேன். வாசப்படியிலே கால் வெக்கவே கூசித்து. நாங்கள் உள்ளே நொழையற அரவம் கேட்டு, சாந்தா உள்ளேந்து வந்து ஏகமா எங்களை உபசரிச்சு உக்காரச் சொன்னா. சோபாவிலே ரெண்டு பேரும் ஒக்காந்தோம். தன் கையாலேயே டிபன், காப்பியெல்லாம் கொண்டு வந்து குடுத்தாள். அவளோட அந்த அபிமானத்தைப் பாக்கும்போது, என் தொண்டைக் குழியுள் ஏதோ ஒண்ணு அடைப்பது போல் இருந்தது. தின்பண்டங்கள், எல்லாம் மிக ருசியுடன் தயாரிக்கப்பட்டிருந்த போதிலும் என்னாலே அவைகளை அனுபவிக்கச் சாப்பிடவே முடியவில்லே. அவைகள் தொண்டையை விட்டு எறங்கினாத்தானே?


அவனுக்கு டெலிவிஷனில் தோன்ற வேண்டும் என்று ரொம்ப ஆசை. வீட்டில் அனுமதி கிடைக்கவில்லை. கோபத்துடன் வீட்டைவிட்டு வெளியே போனான். அவன் படம், 'காணவில்லை' என்ற அறிவிப்புடன் டெலிவிஷனில் வெளியாயிற்று. —சாமி.

வீடு கட்டப் பட்டிருந்த நேர்த்தி. அங்கே புழங்கப் பட்டுக் கொண்டிருந்த சாமான்கள் ஒவ்வொண்ணும் கலாரசனையோட ஜோடிக்கப் பட்டிருந்த விதம் இதெல்லாம் எங்களுக்கு 'இவா கோடீஸ்வரா, கோடீஸ்வரா'ன்னு சொல்லாமே சொல்லிண்டிருந்தது.

கொஞ்ச நாழிக்கப்பறம் 'ஆபீஸ்'லேந்து ரகு வந்தான். எங்களைப் பார்த்து லேசா ஒரு தடவை சிரிச்சுட்டு உள்ளே போனவன், கொஞ்ச நாழிக்கெல்லாம் ஆபீஸ் 'ட்ரஸ்'ஸையெல்லாம் களைஞ்சிட்டு, வேஷ்டி ஷர்ட்டோடு மறுபடியும் நாங்க இருந்த 'ரூமுக்கு' வந்தான். தாயருகில் அமர்ந்து கொண்டான்.

''நாங்க ஒங்க பொண்ணைப் பாத்துட்டு வந்தோம் இல்லையா? எங்களுக்கெல்லாம் ரொம்பப் பிடிச்சுப் போயிருக்கு. விசேஷமா, எங்க ரகுவுக்கு ரொம்ப ரொம்பப் பிடிச்சிருக்கு'' என்று கூறிச் சற்று நிறுத்தி, ரகுவை ஜாடையாகப் பார்த்தாள். சங்கோஜத்தால் முகம் சிவந்த ரகு வேறெங்கேயோ பராக்குப் பார்ப்பது போல் பாவனை செய்தான்.

''எங்களுக்கு இருக்கறது ஒரே பிள்ளை. அவனுக்கு வரப்போற பொண் கொண்டு வந்துதான் எங்களுக்குப் பணம் சேரணும்ங்கற அவசியமேயில்லே. ஏகப்பட்டது எங்களுக்கு பகவானே குடுத்துருக்கான். இன்னும் எதுக்கு பணம்? இன்னொரு விஷயம். இந்தக் கல்யாணத்து பூராச் செலவையும் நானே ஏத்துண்டு நடத்தி வைக்க நீங்க அனுமதி தரணும்'' என்று மிகமிக மென்மையாக, ஆனால் மிக உறுதியான குரலில் சொல்லி முடித்தாள். பாருவுக்கு உணர்ச்சி வசத்தால் பேசவே முடியல்லே. கண்ணுலேந்து நீர் 'கரகர'ன்னு வழிஞ்சுது. சாந்தாவோட ரெண்டு கைகளையும் இறுகப் பிடிச்சுண்டு பேச்சு வராமல் திணறினாள்.

சாந்தாவோ, அவளுக்கே உரிய தன் தெய்வீகப் புன்னகையோட ஏத்துண்டு, பாருவோட தலையை ஆதுரத்தோட வருடிக் கொடுத்தாள். என்னை அவள் பார்த்த பார்வையில் என்ன அர்த்தம் நிரம்பியுள்ளது என்றே என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை.

''சாந்தா, வாழ்க்கையில் இரண்டாவது முறையாக உன்னிடம் தோத்துப் போறேனம்மா'' என்று என் வாய் முணு முணுத்தது.

# நரிக்கொம்பு 8

மினி மர்மத் தொடர்கதை

கிருஷ்ணவேணி

பூவாகச் சொரியும் ஷவரின் அடியில் அருவியில் குளிப்பது போல ஆனந்தமாக நின்று கொண்டிருந்தான் ஹரி. மிதமான சூடு, களைத்த உடலுக்கு இதமாக இருந்தது. ஷவரை விட்டு நகராமலேயே கையால் துழாவினான் அருகிலிருந்த அலமாரியில் — சோப்புக்காக. தட்டுப்பட்டது. ஆனால் கைக்குள் அடங்கியபோது அதில் ஏதோ அசாதாரணத்தை உணர்ந்தவன் சட்டென்று கொட்டும்புனல் ஊற்றிற்கு வெளியே தலையைக் கொண்டுவந்து மறு கையினால், கண்களின் மீதாக வழியும் நீரைத் துடைத்து விட்டுச் சோப்பைப் பார்த்தான். அவன் கண்கள் வியப்பினால் அகன்றன. இரண்டொரு நாட்களே உபயோகித்திருந்த அந்தச் சோப்புக் கட்டி குறுக்கே இரண்டாக வெட்டப் பட்டிருந்தது. மறுபாதி ஷெல்ஃபிலேயே இருந்தது. இப்படி இரண்டாக வெட்டியவர்கள் அதை ஒன்று சேர்த்து ஒட்ட வைத்தபோது போதிய அழுத்தம் கொடுக்கவில்லை. ஆகவே விண்டு கையோடு ஒருபாதி வந்துவிட்டது.

'அது சரி, குளிக்கும் சோப்பையும் வெட்டிச் சோதித்திருக்கிறார்கள் — அதற்குள் ஒளித்து வைக்கப்பட்டுள்ளதா என்பதை அறிய. சோப்பைத் துண்டாடிப் பார்க்க வேண்டுமானால் அவர்கள் தேடுவது சிறிய பொருளாகத்தானிருக்க வேண்டும். விலையுயர்ந்ததாக... வைரம், தங்கம் இவற்றினாலான ஏதோ ஓர் ஆபரணம், அணி... என்னவாக இருக்கும்? அதை என்னிடம் ஏன் எதிர்பார்க்கிறார்கள்? சிந்தனைக் குடைச்சலுடன், குளியலில் ஈடுபட்டான் ஹரி. குளிக்க நுழைந்தபோது இருந்த அமைதி போய்விட்டது அவனிடம். முதல்நாள் மாலை தன் அறையினுள் நுழையும்போது கண்ட காட்சி கண்முன் வந்தது ஹரிக்கு.

அவனை வரவேற்க அன்று ஸோனு இல்லை. உள்ளே நுழைந்தவன் எவ்வித சந்தடியுமின்றித் தன் அறைக்குள் நுழையப்போனான். அங்கு அவனுக்கு முன்பே அநீதா இருப்பதைக் கண்டான். அவள் வெறுமனே அமர்ந்திருக்கவில்லை. அப்படியானால்! ஹாங்கரில் மாட்டி இருந்த ஹரியின் ஆடைகளைப் பரபரப்புடன் ஆராய்ந்து கொண்டிருந்தாள். துழாவும் அவள் கைகளில் ஒன்று அவனுடைய பேண்ட் பாக்கெட்டினுள் நுழைந்து தீவிரமாகத் தேடிக் கொண்டிருந்தது. சில விநாடிகள் அவளது செயலையே வியப்புடன் பார்த்தபடி நின்று கொண்டிருந்த ஹரி, பிறகு தன் தலையை மட்டும் வெளிப்பக்கமாகத் திருப்பி 'ஸோனு' என்று குரல் கொடுத்தான், ஏதேச்சையாக அப்போதுதான் வருபவனைப்போல. அவன் குரல் கேட்டதும் அநீதா அரக்கப் பரக்கத் தட்டுத்தடுமாறிப் போய் அருகிலிருந்த சோபாவில் அமர்ந்து கொண்ட தவிப்பைப் பார்த்து உள்ளுக்குள் சிரித்துக் கொண்டான் ஹரி.

தன் அறையும், மேஜை டிராயர்களும் சோதனைக்குள்ளானதையும்; இப்போது பாத்ரூமில் உள்ள சோப்புக் கட்டிக்குள்ளும் தேடி இருப்பதையும் பார்க்கும் போது ஒருவிஷயம் அவனுக்குத் துல்லியமாகத் துலங்கியது. அநீதாவும் அவள் சித்தப்பாவும் இவனைத் தேடி வந்திருப்பது, இவனோடு — ரமேஷின் வாழ்ந்த இடத்தில் சிலகாலம் தங்கவேண்டுமென்று கூறி இங்கு இவன் தாமதிப்பது; இதற்கெல்லாம் ஏதோ ஓர் உள்நோக்கமிருக்கிறது. ஏதோ ஒரு பொருளை இவர்கள் என்னிடம் இருக்க வேண்டுமென்று எண்ணி, அதை அடைவதற்காக முயற்சி செய்கிறார்கள். நான் இல்லாதபோது என் அறையில் மேஜையில், உடையில் தேடுகிறார்கள். அநீதாவினுடைய இந்த 'ஸர்ச்'சுக்கும் ரமேஷ் டெலிபோனில் 'நான் அதை அனுப்புகிறேன்'.... 'ஜாக்கிரதையாக அதைக் காப்பாற்று...' என்று கூறியதற்கும் ஏதோ தொடர்பு இருப்பதாக நினைக்கலானான் ஹரி. அவன் டெலிபோன் செய்தது இவர்களுக்குத் தெரிந்திருக்குமோ? அதுவும் குறிப்பாக ரமேஷ் அந்த நள்ளிரவில் போன் செய்தது எனக்குத்

## 14,500

### சண்டைக் கணக்கு!

உலகில் இதுவரை எத்தனை போர்கள் நடந்து இருக்கின்றன தெரியுமா? கடந்த ஐயாயிரம் ஆண்டுகளில் 14,500 போர்கள் நடந்திருப்பதாக வரலாற்று நிபுணர்கள் கணக்கிட்டிருக்கிறார்கள்.

இந்தப் போர்களின் காரணமாகச் சுமார் 400 கோடி உயிர்கள் பலியாகி இருக்கின்றன. சண்டைக் கணக்கைக் கவனிக்கும்போது, ஓராண்டு சமாதானம் நிலவினால் 13 ஆண்டுகள் சண்டை நடந்திருப்பது தெரியவந்துள்ளது.

பிரஸ் - இந்தியா.

சண்டைக் கணக்கு • சண்டைக் கணக்கு • சண்டைக் கணக்கு • சண்டைக் கணக்கு • சண்டைக் கணக்கு

தான், என்பதைத் தெரிந்து கொண்டுதான் இங்கு வந்திருக்கிறார்களோ?'

அன்று அதற்குமேல் ஹரியினால் சகஜமாகச் செயல்பட முடியவில்லை. தான் கண்காணிக்கப்படுகிறோம், என்ற நினைப்பும் தன் உடைமைகள் சோதனைக்குள்ளாகின்றன என்ற உணர்வும் அவனை உஷார்ப் படுத்தின. இனி அசட்டையாக இருக்கக்கூடாது, அதே சமயம் அவசரமும் படக்கூடாது என்று உறுதி செய்து கொண்டான். உடையணிந்து உணவருந்த ஹாலுக்கு வந்தபோது அங்கு தேவதை போல, ஒப்பற்றதோர் ஓவியனின் கற்பனையிலே வடிக்கப்பட்ட கட்டழகியாக அநீதா அவனை எதிர்பார்த்து அமர்ந்திருப்பதைக் கண்டான்.

ஒரு குறையுள்ளவர்களுக்கு அதை ஈடுகட்டி நிறைவிக்க அதைப்போலப் பத்துமடங்கு வேறொரு சக்தியை ஆண்டவன் அவர்களுக்கு அளித்துவிடுகிறான். ஹரி உள்ளே வந்ததுமே பார்வையில்லாதவளான அநீதா சட்டென்று அதை எப்படியோ உணர்ந்து கொண்டு விட்டாள். ஒலி அதிர்வா? மோப்பமறியும் திறனா?

''வாருங்கள் மிஸ்டர் ஹரி. உங்களுக்காகத்தான் காத்திருக்கிறேன்'' என்று வரவேற்றாள் வனிதை அநீதா.

''இன்று உங்கள் தோற்றம் அற்புதமாக இருக்கிறது'' என்றான் ஹரி. அவளுக்கு அருகில் அமர்ந்து கொண்டே.

''நிஜமாகவா? நான் ரொம்ப அழகானவள் என்று பலதடவைகளில் பலரால் பாராட்டப் பட்டிருக்கிறேன். ஆனால் அந்தப் பாராட்டுக்குரிய அந்த என் அழகு எப்படிப் பட்டது என்பதை நான் பார்த்துக் கொள்ள முடியாத துர்ப்பாக்கியசாலி!'' அவள் கண்களில் நீர் திரளப் பளபளத்தது.

'ஷாம்பூ' விளம்பரத் துண்டுப்படங்களில் தோற்றமளிக்கும் அழகியின் கேசத்தைப் போல அழகாக, வாரி துவள விட்டிருந்தாள். ஸ்பரிசித்துப் பார்க்க வேண்டுமென்ற ஆவலைத் தூண்டுவதாக இருந்தது அதன் நேர்த்தி. இளமடிப்பு விழுந்த அன்னையில் கவனத்தைக் கவரும்படியாக அந்த அணி — கற்களிழைக்கப்பட்டுப் பூவேலை செய்யப்பட்ட இடையிலே சொருகிக் கொள்ளும் அந்த மாட்டல்-''இது ரொம்ப அழகாக-அதுவும் உங்கள் இடுப்பில் ஏற்றம் பெற்றிருப்பது ரொம்ப எடுப்பாக இருக்கிறது'' என்றான் ஹரி.

அநீதா சொகுஸாகச் சிரித்துக்கொண்டே ''இந்தச் சாவிக் கொத்தைச் சொல்கிறீர்களா?'' என்றாள்.

''இது சாவிக் கொத்தா? பார்த்தால் அப்படித் தெரியவில்லையே ... இடுப்புக்கு அலங்காரமாக எங்கள் பக்கத்தில் ஒட்டியாணம் போட்டுக் கொள்ளுவதுபோல — ஏதோ ஒரு ஆபரணம் என்றல்லவா நினைத்தேன்'' — ஹரி.

''இது ஒருவகை ஆபரணம்தான். ஆனால் வங்காளத்தில் கிரஹ ராணிகள் தங்கள் பொக்கிஷத்தைப் பூட்டி அதன் சாவியையும் இதில் இணைத்துக் கொள்ளுவார்கள்..''

''இதுவே ஒரு பொக்கிஷம் போலத் தானிருக்கிறது... நல்ல வேலைப்பாடு...''

''இதை உங்கள் நண்பர் ரமேஷ் தன் திருமணப் பரிசாக எனக்கு அளித்தார். அதனால்தான் அவர் நினைவாக இதை நான் மறக்காமல் இடையில் செருகிக் கொண்டிருக்கிறேன்.''

''அப்படியா?'' என்றான் வியப்பு மேலிட. வைரங்களும், சிகப்பும் பச்சையும் நீலமுமான உயர்ந்த கற்கள் வைத்திழைக்கப்பட்ட அது பல ஆயிரம் ரூபாய் பெருமானதாக இருக்குமென்று தோன்றியது ஹரிக்கு. ரமேஷ் இப்படியெல்லாம் படாடோபமாகச் செலவழிப்பவனில்லையே என்ற எண்ணமும் தோன்றியது. ஒற்றைப் பச்சைக்கல் மோதிரத்தைத் தன் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட நந்தினிக்குப் பரிசாக வழங்கியவன் — திடீர் மனைவியாக்கிக் கொண்ட இவளுக்கு விலை மதிக்கமுடியாத ஒப்பற்ற இந்த அணியை அன்புப்பரிசாக அளித்திருக்கிறானே என்று நினைத்தவனாக ''இந்த அழகான இடைக்கு ஏற்ற அழகான ஆபரணம்தான் இது!'' என்றான் பாராட்டாக. பிறகு ''ரமேஷை நீங்கள் எப்படிச் சந்தித்தீர்கள். அவனை முன்பே உங்களுக்குத் தெரியுமா?'' என்று கேட்டான்.

(தொடரும்)





# அமைதேய அமரர்

'தூண்'

"மாட்டை ஓட்டிப் போய் மேச்சுக்கிட்டு வாடா, அஜீத்!" என்றாள் அன்னை காமாக்யா.

"சரி, அம்மா!" என்ற அஜீத் முண்டாசை வரிந்து கட்டிக் கொண்டு கச்சத்தை இறுக்கி விட்டுக் கொட்டிலுக்குப் போனான்.

அவள் சாணத்தை அள்ளி ஒரு பகுதியை வரட்டிக்காக வைத்து ஒரு பகுதியை எருக்குழியில் போட்டுக் குனிந்தே வேலை செய்த ஆயாசம் தீர நிமிர்ந்து இடுப்பைப் புறங்கைகளால் குத்திவிட்டுக் கொண்ட போது எட்டி நாட்டாண்மைக்காரர் வீட்டு ஆள் வருவதைப் பார்த்தான். அவன் எங்கு போகிறானோ என்று மறுபடியும் குனிந்த காலில் போட்டிருந்த கனத்த வெள்ளிக் காப்புகளைச் சாணி போகக் கோதுமை வைக்கோலால் அழுத்தித் துடைத்துக் கொண்டான்.

அவளை அணுகிய ஆள், "காமாக்கி, அஜீத்தை ஊராட்சி நாட்டாமை கூட்டாரச் சொல்லுது" என்றான்.

"ஏதுக்கு?"

"அரசியல் கூட்டம். ஆள் வேணும்."

"கூட்டம் போட்டுக் காலங்கழிக்கறதுக்குப் பதிலா வேறு ஏதாச்சும் உருப்படியாச் செஞ்சா வருவாயைக் கூட்டலாமே, பெருக்கலாமே?"

"இதெல்லாம் உனக்கு ஒண்ணும் புரியாது."

"இந்தாப் பாரு. நான் புருசன் இல்லாதவ. ஒரு மாட்டை, ஒரு கொல்லைக்காட்டை, நாலு மரத்தை வெச்சுக்கிட்டு வவுறு வளக்கறேன். அந்தப் புள்ளையைக் கூட்டிப் போய்க் கெடுத்து என் சோத்திலே மண்ணைப் போடாதீங்க."

அவள் கனைத்துக் கொண்டாள்.

"நம்ம ஊரிலேருந்து முந்நூறு ஆளு போவணும். இல்லாங்காட்டி முடியாது. முந்நூறைப் புடிக்க நாங்க மூச்சு முட்டிக்கிட்டிருக்கோம். அஜீத் வந்துதான் ஆவணும்."

"வராங்காட்டி?"

"உன்னாலே மாடு வெச்சுக்க முடியாது ஊரிலே. தோப்பு வச்சுக்க முடியாது. இங்கே வாளவே முடியாது!"

"என்ன பயமுறுத்திரியே!"

"சும்மா வரப்போறதில்லே உன் மவன்."

"சும்மாடு தூக்கிட்டு வரப்போறானா?"

"கிளம்பறத்தே இங்கிட்டு நல்ல சோறு-ஆளுக்கு அஞ்சு ரூபா. அங்கிட்டு சாப்பாடு. பஸ்லே இலவசமா போக வர சவாரி."

"எனக்கு இதெல்லாம் புடிக்கலே. அவங்க அவங்க வேலையைச் செஞ்சுக்கிட்டே இருந்தா அரசியல் கூட்டமே வேண்டாமுங்கறேன்."

"நீயும் நானும் சொல்லியா, காமாக்கி? மவன் எங்கே?"

"நீ போய்த் தேடிக்க."

"ஊரோட ஒத்து வாளணும், இல்லாட்டி உபத்திரவம்."

அவன் கிழக்கு நோக்கி நடந்தான். அவன் பணி ஒவ்வொரு பட்டியிலும் குடிசையிலும் போய் யாரெல்லாம் கூட்டத்துக்கு வர வேண்டும், எங்கு கூட வேண்டும், வரத் தவறினால் என்ன ஆகும் என்றெல்லாம் சொல்ல வேண்டியது. அவனுக்கே இந்த வேலை பிடிக்கவில்லை. அவன் என்ன செய்வான்? அவன் இதையெல்லாம் செய்யாவிட்டால் அவன் வயிறு வளர்க்க முடியாது என்பதுடன் ஊராட்சி நாட்டாண்மைப்

அவர்: என்ன சார்! நேற்று உங்க வீட்டிலே ஒரே கூச்சல்? உங்க மனைவியுடன் ஏதாவது தகராறு?

இவர்: அதை நீன் கேட்கறீங்க? அவள் ஒரே அடம் பிடிக்கிறா!

அவர்: என்ன இருந்தாலும் நீங்க சற்று அந்தப் பக்கம் விட்டுக் கொடுத்து விடுவது நல்லது!

இவர்: அட கடவுளே! தகராறுக்குக் காரணமே அதுதான்! ''நீங்க எப்போது பார்த்தாலும் சரிசரின்னு விட்டுக் கொடுத்து என்னை ஊமையாக்கி விடறேளே'' அப்படின்னு கத்தறா சார்!''

'சரஸன்.)



---

பண்ணையார் அவன் வீட்டை அவன் ஒத்துழையாமைக்காக அவன் குடும்பத்தோடு இரவில் கொளுத்திவிட்டுக் காலையில் வந்து அவர் குடும்பத்தோடு கண்ணீர் வடித்துக் கனியும் சாம்பலை அணைக்க முயன்று ஊரின் அனுதாபத்தைப் பெறுவார். இதுதான் இன்றைய அரசியல். இந்தக் கட்டுக்கோப்புக்குள் தான் வாழ வேண்டியிருக்கிறது. பாவம், பண்ணையாரைச் சொல்லிப் பயனில்லை. அவருடைய நிலம் அவர்கள் மூதாதையர்களால் எப்படி எப்படியோ சேர்க்கப்பட்டது. அதை இழக்க அவர் மனம் இசையுமா? இப்படியெல்லாம் நினைத்துக்கொண்டு அவன் கலியான் வீட்டுக்கு வந்தான்.

கட்டிலுக்குக் கயிறு பின்னிக்கொண்டிருந்த கலியான் ''என்ன இன்னம் ஏதாச்சும் கூட்டமா? அஞ்சு ரூவா கொடுத்து ஆள் கூட்டறதிலே நீ எத்தினி தட்டிக்கிறே. கட்சிலே சேர்ந்து ஒரு காலத்தே ஊர் பேரில்லாத பசங்க மாடி வீடு, கட்டிக்கிட்டு நாலு ஏக்கர் நிலம் வாங்கிக்கிட்டு, கொளிக்கறானுவ! போடு! சுக்கிர தசை உனக்கு அடிக்கிது!'' என்றான்.

''எலே, தேன் எடுக்கறவன் பொறங்கையை நக்காம இருப்பானான்னு பெரியவங்க பேச்சு பலிக்க வேண்டாம். வாங்கிக்க உன் ஐந்து ரூபாவை!'' என்று ஐந்து ரூபாய்நோட்டை நீட்டினான் வந்தவன். கலியான் அதை வாங்கி மடியில் வைத்துக் கொண்டான்.

ஆள் சேர்க்கும் ஆள் அடுத்தாற்போல், கோகுல் வீட்டுக்குள் புகுந்தான் .கோகுல் நல்ல குடிகாரன். அவனுக்கு எப்போதும் காசு வேணும். அவன் ஆளுக்கு ஐந்து ரூபாய் என்று வாங்கிக் கொண்டு குடும்பத்தார் அத்தனை பேருடன் வந்து அத்தனை ரூபாய்க்கும் அவன் திரும்பும்போதே குடித்துவிட்டு வந்துவிடுவான்.

''கோகுல், இந்தா ஐம்பது ரூபாய்!'' என்றான் நுழைந்ததுமே.

''எப்பக் கூடணும்?''

''காலே ஏழுக்கு.''

''போனவாட்டி அவங்க போட்ட சோறு நல்லா இல்லேன்னு சொன்னேனே அவங்க கிட்டச் சொன்னியா?''

''இந்த வாட்டி பாரேன் சோறு என்னமா இருக்குதுன்னு'' என்று சொல்லிக் கொண்டே அவன் நகர்ந்தான்.

''என்ன, ஆள் பிடிக்கவா?''

''என் பிழைப்பு.''

''ரொம்பத் துக்கிக்காதே, குளந்தே. எத்தினி ஆள் வேணும். நான் கலே பொறுக்க அடுத்த கிராமத்திலேந்து பத்து கொண்டாந்திருக்கேன். அவங்

களுக்குள்ள ஐந்தைக் கொடுத்து எனக்கும் ஆளுக்கு ஒரு ரூபா கமிசன் கொடு. நீ ரெண்டு ரூபா தட்டிரிலே கமிசன். அதில் ஒன்று கொடுத்தா முளுகியா போயிரும்? தவிர வராத ஆட்கள் பேரைக் காட்டி வேறே...?''

சிரித்துக் கொண்டே தான் சொன்னான் ஆஸ்மான் ராம், அவன் நிரை மீசைக்கடியில் உதடுகளூடே குறும்பு தவழ.

''எண்ணி வாங்கிக்க, ஆஸ்மான்! ஆள் குறையப்படாது, ஊரிலே இரண்டொரு குடி வெளியிலே போயிருக்கு. எனக்கு அவங்க கொடுத்த காலத் தவணையும் கொஞ்சம்.''

''என்ன கோஷம்?''

''கோஷம் வேஷம் எல்லாம் பளகதான்.'' பணத்தை எண்ணிக் கொடுத்தான் ஆள் சேர்க்கும் ஆசாமி ஆஸ்மானிடம். ஆஸ்மான் எண்ணி வைத்துக் கொண்டான்.

மறுநாள் இரண்டு லாரிகள் ஆட்களைச் சுமந்து, கிராமத்தை விட்டுப் புறப்பட்டுச் சாலைக்கு வந்து பெட்ரோல் பங்கில் நின்றதும், அந்த 'பங்க்'காரனுக்கு வயிற்றில் புளியைக் கரைத்தது, ஓசியில்தானே போட வேண்டும் என்று.

லாரியில் இருந்த கொடி பிடித்த ஊர்த் தலைவர் இறங்கி வந்தார்.

''போடு டீசல்.''

''இப்ப டீசல் பற்றாக்குறைக் காலங்க.''

''இரண்டு வண்டிக்கும் இப்பப் போட்டுட்டு அப்புறம் டீசல்லே எத்தினி என்னத்தை வேணும்னாலும் கலப்படம் செய். புகார் வந்தா நான் பார்த்துக்கிறேன்'' என்றார் கொடி ஏந்திய தலைவர்.

''அது போதுங்க. இந்த எண்பது லிட்டரைக் கொடுத்து நான் எண்ணூறு லிட்டர் கலப்படத்திலே சம்பாரிச்சுடுவேன்!'' என்று பங்க்காரன் ஒக்குமத்தானான்.

லாரிகள் மைதானத்துக்கு வந்தபோது ஒலிபெருக்கிகள் அலறிக் கொண்டிருந்தன. கொடிகள் பறந்து கொண்டிருந்தன, ஜே கோஷமும் முரதாபாத் கோஷமும் முழங்கிக் கொண்டிருந்தன. பல ஊர்களில் இருந்தும் இப்படித் ''தன்னிச்சையாய்''ப் பெருந்தலைவரின் முகவெட்டுக்காக அவருடைய சுடில்லாத் தலைமையை மெச்சும் சின்னமாக வரும் மக்கள் நிரம்பிய லாரிகள் புழுதியைக் கிளப்பிக் கொண்டு வந்தன.

பெருந்தலைவர் சொன்ன நேரம் தவறாமல் சொற்பொழிவுக்கு வந்து விட்டால் பெருந்தலைவர் என்ற பெயர் எதற்கு? அவர் வரக் காலதாமதம் ஆனதால் யார் யாரோ இனிமேல் பெருந்தலைவராகப் போகிறவன் தான் தான் என்ற எண்ணத்தில் சவுடாலாகப் பேசினார்கள். கூட்டம் முன்னோடி கைதட்டிகளுடன் கைதட்டி ஆரவாரம் செய்தது.

இரும்புக்குல்லா போட்ட குண்டாந்தடிப் போலீஸ் பிரம்புக் கேடயங்கள் தாங்கி நான்கு பக்கங்களிலும் கும்பல் கும்பலாக நின்று கொண்டிருந்தது. வலைப் பாதுகாப்புடைய போலீஸ் லாரிகளில் ரேடியோவில் அதிகாரி ஒருவர் பேசிக் கொண்டேயிருந்தார்.

கூட்டத்துக்கு வெளியே கறுப்புக் கொடி கூட்டம், கட்சிக்கும் கூட்டப் பெருந்தலைவருக்கும் முரதாபாத் ஓயாமல் கத்திக் கொண்டிருந்தது.

இறுதியில் தலைவர் வந்தே விட்டார்.
புகைப்பட பளிச்சொளிகள் இளித்தன.
மேடையேறினார் தலைவர்.

கூட்டம் ஜே, போட கறுப்புக்கொடியாளர் முரதாபாத் கூச்சலிட, சுற்றியிருந்த மரங்களில் இருந்த பறவைகள் எல்லாம் எல்லா அண்டத்துக்கும் ஆபத்து வந்துவிட்டது என்று நடுநடுங்கிச் சிறகுகள் படபடக்கப் பறந்தன.

அமைதி.

''என் தலைமைக்கு என்மேல் இவ்வளவு கரிசனம் காட்டி யாரும் அழையாது சுயேச்சையாக என்னைக் கௌரவிக்க வந்துள்ள இக் கூட்டம் எதிர்க்கட்சிக்கு ஒரு படிப்பினையாக இருக்கட்டும். இந்த நாட்டை என்னால்தான் பயனுடன் நடத்த முடியும் என்பதை...''

''யாருக்குப் பயன்?'' என்றது ஓர் ஒற்றைக் கூச்சல்.

உடனே ஒரு கல்லு.
அதோடு கலவரம்.
போலீஸ் புகுந்தது.
லாட்டிகள் வீசின.
கண்ணீர்ப் புகை கவிந்தது,
கூட்டம் கலைந்தது.

ஆம்புலன்ஸ்கள் வந்தன. ஐம்பது பேர் ஆஸ்பத்திரிகளுக்குச் சென்றனர். தப்பினவர்கள் லாரிகளில் ஏறினர். உள்ளூர்க்காரர்கள் ஓடினர். விழுந்தனர். கசுக்கிக் கொண்டனர். காயப்பட்டனர். அலறினர். கூவினர்.

கூட்டம் கலைந்ததும் ஒரு பையன் மிதிபட்டுச் செத்துக் கிடந்தான். அவன் யார் என்று சொல்ல அங்கு ஆள் இல்லை. அவனைப் பார்த்தது யார் என்றும் சொல்ல முடியாமல் அவன் முகம் எலும்புகள் நொறுங்கி விகாரப்பட்டுக் குருதியில் ஊறி உப்பிக்கிடந்தது.

கறுப்புக் கொடிக்காரர்கள் உடனே இந்தப் பையனுக்கு, இந்தப் பரம தியாகிக்கு ஒரு சிலை அந்த இடத்திலேயே எழுப்ப வேண்டும் என்று நிதி திரட்ட ஏற்பாடு செய்தனர். அவன் முகம் எப்படி இருக்கும் என்ற

## பேச்சை எழுத்தாக மாற்றும் சாதனம்!

பேசும் வார்த்தைகளை, உடனடியாக எழுத்துக்களாக மாற்றும் அதிசயக் கருவியை ஜப்பான் நிபுணர்கள் உருவாக்கியுள்ளனர்.

மைக்ரோபோனில் பேசும்போது, பேச்சு சத்தம் நான்கு விதமாகப் பிரிக்கப் படுகிறது. இவை, உயிர் எழுத்துக்களாகவும், மெய்யெழுத்துக்களாகவும் பிரிக்கப்படுகிறது. ஏற்கெனவே சொற்களாகச் செலுத்தப்பட்டுள்ள கம்ப்யூட்டரில் இவை ஒப்பிட்டுப் பார்க்கப்படுகின்றன. சத்தத்திற்கு ஏற்ற சொற்கள் எவை என்பது டெலிவிஷன் திரையில் தெரிகிறது. இந்தப் பணி முழுவதும், ஒன்றரை வினாடியில் முடிந்து விடுகிறது.

குணோபன்.










**டார்டாய்ஸ்** கொசு வர்த்திச் சுருள்.



தயாரிப்பாளர்:
பாம்பே கெமிகல்ஸ் ப்ரைவேட் லிமிடெட்
:போர்ட், பம்பாய்-400 023. :போன்: 273831

உண்மை தெரியாமல் அவனுக்குச் சிலை வைக்க அருவமான சிலை வைக்கலாம் என்ற யோசனை சொல்லப்பட்டது.

காமாக்யா லாரியில் பின்னை வந்து இறங்காததால் அஜீத் எங்கே என்று கேட்டாள் ஆள்பிடியானை.

''கூட்டத்தில் தவறியிருப்பான், வருவான்!'' என்றான் ஆள்பிடியான்.

அவன் அஜீத்துக்கும் அவன் கூட்டாளிப் பையன்களுக்கும் இதுவரையில் கொடுக்காத பணம் அவன் மடியில் உறுத்திக் கொண்டிருந்தது.

கிராமப் பெரும் புள்ளி வந்தார்,

''இந்தக் கூட்டம் விளுகிவிட்டது. அடுத்த கூட்டம் அதே இடத்தில் நாளை கூட்டப் பெருந்தலைவர் கட்டளை. நாம் முழுபலத்தோடு கூட்ட வேண்டுமாம். நம் கோட்டா முந்நூறு பேர் சேர்க்கணும்'' என்றார்.

'இருநூற்றித் தொண்ணூற்றி ஒன்பது சேர்க்கலாம்'' என்று எண்ணிய ஆள்பிடியான் ''ஆகட்டுங்க'' என்றான் பணிவாக.

''அஜீத் எங்கேங்க?'' என்றாள் காமாக்யா;

''அட சும்மா இரு பொம்பளை. ஆளைத் தொந்தரவு செய்யாதே. செத்தா போயிருப்பான் மவன்? வந்திடுவான்'' என்று நகர்ந்து போனான் ஆள்பிடி ஆள்,

அழுது கொண்டே வந்த காமாக்யா முனகியபடி நிற்கும் எருமையின் முகத்தை அணைத்து அழுதாள்!

---

# அறுவடைப் பாட்டு

மூலம் :

**கவிக்குயில். சரோஜினி நாயுடு**

தமிழாக்கம்: பேராசிரியர் :

**கே. எஸ். நாகராஜன்**

## ஆடவர்

தாமரைத் தலைவ! சாய்கதிர்த்தலைவ!
கதிர்வளம் பெருக்கும் காலைத்தலைவ!
விதைப்பின் பயனைவிளைக்கு நின்னருளே
கதிர்களை வளர்த்ததுன் கருணைப் பெருக்கே
நன்றி மாலையும் நல்லுரைத் திறையும்
ஒன்றி நினக்கே உவப்பொடு தருவேம்
எம்வயற்பொன்மையும் எம்கனிப் பொன்மையும்
அழகுசால் ஒளியும் அளித்தநிர் போற்றுதும்
சூரிய! நினையாம் தொழுது வணங்குவேம்
குவித்தகைக் கஞ்சமும் குழலு மேந்தியே
வானவில் தலைவ! வளர்பயிர்க் கரசே!
பேரருள் பெருமைசால் பெருங்கடற் கிறையே!
எம்படைச் சால்வளம் இயைத்ததுன் னருளால்
கதிர்மணி வளர்த்த கருணையும் நினதே
நன்றி யிசைப்பேம் நலத்திறை யளப்பேம்
எம்நில வளமும் எழில்கனி முதிர்வும்
மழையும் பனியும் வழங்கிய நின்னை
வாழ்த்துவம் புகழுவம் வருண தேவ!
கஞ்சமும் குழலும் கரதலந் தேந்தியே.



## பெண்டிர்

காய்தரும் மலரில் வாய்தரும் அரசியே!
கதிர்முதிர் பயனைக் காட்டும் இறைவியே!
எல்லாம் வல்லாய் இருநிலச் செல்வியே!
எமக்குண வருளும் இன்பால் முலையாய்!
எம்பொருள் பிறக்கும் எழில்வயிற் றன்னையே!
எம்முளத் துன்பும் எம்திறை மாலையும்
நினக்கே தருவேம் நிறையநீ யருளிய
எழில்வளச் செல்வம் ஏந்தினம் வருவேம்
பலதிற மகிழ்ச்சியின் பண்ணையே! நின்னை
வாழ்த்துவம் புகழ்வம் மாண்புறு நிலமே!
கஞ்சமும் முரசும் கைமுழக் குவமே.

எல்லோரும் ஒன்றாக

உலக இறைவ! உயிர்க்குல இறைவ!
நித்தியத் தந்தையே! நிறையருள் ஓம்!
எம்பயிர் விதைநீ அரிவாள் நீயே
எம்கரம் இதயம் இல்லம் நீயே
எம்முயிர் எம்பணி இசைப்போம் நினக்கே
அடைக்கலம் அருள்க அறிவினை அருள்க
காவலும் அருள்க கருணையங் கடலே!
உயிருக்குயிரே! உளமுற வாழ்த்துவம்
பிரமதேவ! பெரிதும் புகழ்வேம்!
கஞ்ச மேந்தி நெஞ்ச முருகியே.

# ஐந்து வயது சிறுமி செல்வி ரீனுபோஸ்,



தன் பிறந்தநாள் பரிசாக ஒரு பாங்க் வேண்டுமென வற்புறுத்தினாள்.



அவளுடைய தந்தை போஸ ஆந்த்ரா பாங்கின் கிட்டி பாங்க் சிறந்த அன்பளிப்பாக இருப்பதைக்கண்டார் தன்னுடைய செல்லச் சிறுமியின் சக்திக்கேற்ப பாங்கிங் முறைகளின் நன்மைகளைத் தந்தது அந்த பாங்க்.

ஆம், பாங்கின் பலதரப்பட்ட சேவைகள் ரீனுவின் வயதுக்கு அப்பாற்பட்டவை. ஆனால் அவள் தன்னுடைய நண்பர்களிடம் கிட்டி பாங்க் பொம்மை இருப்பதைக் கண்டாள். அதில் பணம் போட்டு வருவதையும் பார்த்திருக்கிறாள். அதனால்தான் கிட்டிபாங்க் வேண்டுமென விரும்பினாள். தனக்காக சிறுதொகையை சேமிப்பதற்கு முடிவு செய்தாள். ஆந்த்ரா பாங்கின் கிட்டி பாங்கில் சேமிப்பதில் மகிழ்ச்சி கொள்ளும் லட்சக்கணக்கான குழந்தைகளில் ரீனுவும் ஒரு குழந்தை

ஏறத்தாழ 55 வருட பாங்கிங் அனுபவமும், நாடு முழுவதும் பரவியுள்ள 600க்குமேல் உள்ள கிளைகளும் கொண்டுள்ள ஆந்த்ரா பாங்க் மற்ற திட்டங்களையும் கொண்டுள்ளது அவைகளில் சில கல்பதரு, பாக்யலக்ஷ்மி, ஸம்ரக்ஷா, ஸம்க்ஷேமா, இனைகாய கர்ஷகஷாய, க்ருஷிகல்பா, மற்றும் மாதர்களுக்கு சோஷியல் செக்யுரிட்டி ஸ்கீம். அத்துடன் நலிந்த பகுதிகள் உள்பட தொழில்கள் மற்றும் முன்னுரிமை தொழில்களுக்கு முன் பண உதவிகளும் வழங்குகிறது. உங்கள் தேவைகளுக்கேற்ப முன்யோசனையுடன் ஒவ்வொன்றும் திட்டமிடப்பட்டிருக்கிறது.



**தி ஆந்திரா பாங்க் லிமிடெட்**

பதிவுபெற்ற மற்றும் மத்திய அலுவலகம்
சுல்தான் பஜார், ஹைதராபாத் 500 001

ஆந்த்ரா—மக்களின் தேவைகளுக்கு செவி சாய்க்கிறது.

சேர்மன்: ஓ. ஸ்வாமிநாத ரெட்டி.

KIRON/AB/78

# கனவா-நிஜமா? 8

கதை: வாண்டுமாமா
சித்திரம்: செல்லம்













அரசே! உங்களையும், உங்கள் வம்சத்தையும் அழிக்கச் சதிகா ரர்கள் திட்டமிடப் போகிறார்கள். விரைவில் அது நிறைவேறப் போகிறது.
இவனைக்கொண்டு போய்ப் பாதாளச் சிறையில் தள்ளுங் கள். இவனுக்குத் தீங்கு ஏற்படா திருக்க அதுவே ஏற்ற இடம்.


வருங்காலத்தை நான் கண்டேன். அங்கு நான் வாழ்ந்தேன். உண்மையைக் கூறுகிறேன்.
புத்திபேதலித்துப் போய் விட்டது... பாவம்...
அவன் நிலை யைப் பார்க்கப் பரிதாபமாக இருக்கிறது.


அதோ... பிரதம சேனாபதி தந்தவக்ரர் வருகிறார்.
நான் விடை பெறுகிறேன் அண்ணா. கிழக்குக்கோட்டை யருகே படை வீரர்களின் பயிற்சி முகாமைப் பார்வையிடப் போகி றேன்.


தந்தவக்ரர் மன்னர் வஜ்ரபாகுவை வணங்குகிறார்
மன்னர் பிரானே! கோடை ஆரம்ப மாகிவிட்டது. நீங்கள் குடும்பத்துடன் வசந்த மாளிகைக்குப் போக வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து விட்டேன். என்று கிளம்பப் போகிறீர் கள் என்பதைத் தெரிவித்தால்...
மறந்தே போனேன்... கோடைக்கு மலைப்பிரதேசத்திலுள்ள வசந்த மாளிகைதான் மகிழ்ச்சியளிக்கக் கூடிய இடம். விரைவிலேயே கிளம்பலாம். தம்பி வேங்கை மார்பனுக் கும் செய்தி அனுப்புகிறேன்.


வசந்த மாளிகை வாசத்தின் போது நம்படை வீரர்க ளின் வீர விளையாட் டுக்களைக் கண்டு களிக்க ஏற்பாடு செய்துள்ளேன்.
பேஷான ஏற்பாடு தான். நம் வீரர் களின் திறமை யைப் பாராட்டிப் பரிசுகளும் வழங்கலாமே.
தொடரும்

ஆசிரமத்தின் ஒழுக்க விதிகளைச் சிலர் மீறி விட்டார்கள் என்பதால் அதற்குப் பரிகாரமாக நவம்பரில் ஏழுநாட்கள் உண்ணு விரதம் இருந்தார் காந்தி. ஸி. ஆர். மிகுந்த மனச்சங்கடத்துக்கு உள்ளானார். ''உண்ணு விரதங்கள் பற்றி பாபுவிடம் என்றேனும் ஒருநாள் நான் பேச முடியுமானால் நல்லது'' என்று தேவதாஸுக்கு அவர் எழுதினார். இவ் விஷயம் பற்றித் தம்மைவிட பாபுவுக்கு நிறையத் தெரியும் என்று கடிதத்தில் ஸி. ஆர். ஒப்புக் கொண்ட போதிலும் தொடர்ந்து தம் கருத்தையும் வெளியிட்டார்:

''உடலைப் பட்டினி போட்டு வருத்தினால் ஆன்மாவுக்குச் சோறு போட்டதாகும் என்று பாபு எண்ணுகிறார் போலும். சில வகைக் கணக்குகள் பிசகாதுதான். ஆனால் எல்லாமே சரி என்று கூறுவதற்கில்லை. என் வருத்தமும் அன்பும் மிக அதிகமாக உள்ளன. அவருடன் சண்டை போட என்னால் முடியாது.'' 1

நீதிமன்றங்களைப் பகிஷ்கரிப்பது எனத் தாம் மேற்கொண்டிருந்த சபதத்தை மீற அந்த ஆண்டின் இறுதியில் ஸி. ஆருக்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது. திருச்சானூர் கோயிலுக்குள் ஓர் ஐந்தாம் வருணத்தவன் நுழைந்து விட்டான். போலீஸார் அவனைப் பிடித்து விட்டனர். மத உணர்ச்சிகளை அவன் அவமதித்து விட்டதாகக் குற்றம் சாட்டி வழக்குத் தொடுத்தார்கள். எழுபத்தைந்து ரூபாய் அபராதம்; கட்டத் தவறினால் ஒரு மாதம் கடுங்காவல் என்று தீர்ப்பாகியது.

சித்தூரில் மேல் கோர்ட்டில் அவன் சார்பில் வழக்காடுமாறு ஸி. ஆரைக் கேட்டுக் கொண்டபோது அவர் ஒப்புதல் அளித்தார். இருப்பினும் பிரதிவாதியின் வக்கீல் என்று அழைக்கப்படுவதையோ டர்பன், கறுப்புக் கோட்டு அணிவதையோ அவர் விரும்பவில்லை. கோர்ட்டுக்கு மரியாதை காட்டத் தலையையும் தோள்களையும் கதர்த் துணியால் மறைத்துக் கொண்டார். இந்தத் தோற்றமே கோர்ட்டில் தாம் வாதாடுவதற்குத் தடையாகி விடுமோ என்ற கவலையும் அவருக்கு இருந்தது. குற்றம் சுமத்தப்பட்டவனின் நண்பன் என்ற முறையில் அவன் சார்பில் வழக்காட நீதிபதியை அனுமதி கேட்டார். பண்பாளரான நீதிபதி அனுமதி வழங்கினார்.

ஸி. ஆருக்கு இருந்த வழக்கறிஞர் உள்ளம் மரத்துப் போய்விடவில்லை. ஏழு ஆண்டுகளாகத் தாம் வழக்கறிஞர் தொழிலில் ஈடுபடாமலிருந்து இப்போது வழக்காடுகிறோம் என்ற எண்ணமே அவருக்கு ஏற்படவில்லை. 2 ''கோவிலுக்குள் இருந்த கடவுளைத் திருடித் தனது இதயப் பெட்டகத்துக்குள் வைத்துக் கொண்டு வெளியேறி விட்டான் அந்த ஐந்தாம் வருணத்தவன். அவன் செய்ததெல்லாம் இதுதான். இது குற்றமாகுமா?'' என்று வாதாடினார் ஸி. ஆர். 3 ''பயபக்தி என்பது அவ''திப''தாகுமா? கோவிலின் நிர்வாகிகள் ஆட்சேபணை எழுப்பினால் கூட அந்த ஐந்தாம் வருணத்தவனுக்குக் கோயிலுக்குள் நுழைய உரிமை கோரும் தகுதியுண்டு. தரையில் கிடக்கும் தன்னுடைய பொருளையே ஒருவன் குனிந்து எடுத்துக் கொள்வானானால் அது திருட்டு ஆகாது. ஐந்தாம் வருணத்தவன் தனக்கு உரிமையுள்ள ஒன்றைத்தான் எடுத்துக் கொண்டான். மேலும் அந்த ஐந்தாம் வருணத்தவன் கோவிலில் நுழைந்ததால் தன்னுடைய மத உணர்வுகள் பாதிக்கப்பட்டிருப்பதாக எந்த ஒரு சாட்சியும் கூறவில்லை.''

''ஐந்தாம் வருணத்தவனின் உரிமை சட்டபூர்வமாக ஏற்றுக் கொள்ளப்பட வேண்டிய ஒன்று'' என ஒப்புக் கொண்டார் நீதிபதி. எனினும் அதைச் சட்டம் இன்றுவரை ஏற்கவில்லை என்பதையும் சுட்டிக் காட்டினார். அதே நேரத்தில் அந்த ஐந்தாம் வருணத்தவன் மதத்தை அவமதித்தான் என்பதும் நிரூபிக்கப்படவில்லையாதலால் அவனை விடுதலை செய்தார்.

ஒட்டுவாரொட்டி போல் இந்த வாதம் பிறரையும் பற்றிக் கொண்டது. இதே



# ராஜாஜி வாழ்க்கை வரலாறு

## ராஜ்மோகன் காந்தி

போல் குற்றம் சாட்டப்பட்ட இன்னொரு தீண்டாதானும் விடுதலை பெற்றான். இருப்பினும் ஒத்துழையாமைக் காரர்களின் மனச்சாட்சி அதிர்ச்சியுற்றது. ஆசிரமத்திலேயே சக ஊழியர்கள், நீதி மன்றத்துக்கு ஸி. ஆர். திரும்பியது குறித்து முகம் சுழித்தார்கள். ஆனால் ஸி. ஆரின் நடத்தையை மகாத்மா ஆமோதித்தார்.

''இவரது குறுக்கீட்டினால் குற்றவாளி விடுதலை பெற வாய்ப்பிருக்கும்போது அவ்விதம் செய்யாமல் ஒத்துழையாமை மீது போலியான பக்தி செலுத்தி அதிலேயே திருப்தி அடைந்து பேசாமல் நடப்பதைப் பார்த்துக் கொண்டிருந்திருப்பாரேயானால் ஸி. ஆர். ஒரு வேஷதாரியாகத்தான் விளங்கியிருப்பார்'' என்று காந்தி எழுதினார். 4

---

1. ஸி. ஆர். தேவதாஸ் காந்திக்கு எழுதியது தேவதாஸ் காந்தி தாள்கள் - 2-12-25.
2. மேற்படி, 24-12-25.
3. மகாதேவ தேசாய் நாட்குறிப்புகள், பாகம் 8, பக்கம் 28.
4. யங் இந்தியா 14-1-26.

# 25. மதுவிலக்கில் மோகம்

சுயராஜ்யக் கட்சியைப் பலப்படுத்த மகாத்மா மேற்கொண்ட முயற்சிகள் பலன் தரவில்லை. 1925 இறுதிக்குள் நிலைமை வேறு விதமாக மாறிவிட்டது. அதாவது அரசுக்கு முட்டுக்கட்டை போடுவதற்குப் பதிலாக சுயராஜ்யக் கட்சிக் காரர்கள் தங்களுக்குள்ளேயே ஒருவருக்கொருவர் முட்டுக்கட்டை போட்டுக் கொண்டிருந்தார்கள்.

கான்பூரில் காங்கிரஸின் வருடாந்திர மகாநாடு முதன்முதலாக ஒரு பெண்மணியை — சரோஜினி நாயுடுவை — அக்கிராசனராகக் கொண்டு கூடியது. அப்போது சுயராஜ்யக் கட்சியில் ஏற்பட்டிருந்த விரிசல்கள் மேலும் விரிவடைந்தன.

கிராமப்புறத்திலேயே இருந்து வந்த ஸி. ஆர்., தாம் சட்டசபைப் பிரவேசம் குறித்து செய்த எச்சரிக்கைகள் சரியானவையே என்பது நிரூபணமாகி வருவதை நிச்சயம் உணர்ந்திருப்பார். இன்னொருபுறம் சட்டமறுப்புக்குச் சமீப காலத்தில் சாத்தியக் கூறுகள் ஏதும் இல்லை என்றும் தோன்றியது. அதற்குத் தேவையான உத்வேகமும் மனக் கொதிப்பும் காணப்படவில்லை. இதைக் காந்தி கான்பூரில் குறிப்பிட்டிருந்தார்.

இந்த நிலையில் ஸி. ஆர். ஒரு யோசனை தெரிவித்தார். நிர்மாணத் திட்டங்களின் முன்னேற்றத்துக்குச் சட்டசபைகளைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதே அந்த யோசனை. ''சட்டசபைகளில் சுயராஜ்யக் கட்சி அங்கத்தினர்கள் மதுவிலக்கை வலியுறுத்தட்டும். அரசு இதற்கு முட்டுக்கட்டை போட்டால் ஓர் உயிர்த்துடிப்பு மிக்க அரசியல் பிரச்னை எழும். மது போன்ற ஓர் ஏழை மக்களின் பிரச்னையை வைத்து காரசாரமான விவாதம் நடத்தலாம். சுயராஜ்யக் கட்சியினர் விரும்புவது இத்தகைய விவாதங்களைத் தானே?''5 இவ்விதம் ஸி. ஆர். மகாத்மாவுக்கு எழுதினார்.

சுயராஜ்யக் கட்சிக் காரர்கள் சார்பில் முதலில் சத்தியமூர்த்தி இந்த யோசனையை அலட்சியப்படுத்திப் பேசினார். ''சுயராஜ்யம் தான் நம்முன் இருக்கும் ஒரே பிரச்னை'' என்றவர் தொடர்ந்தார்: ''நான் குடிகாரர்கள் நிரம்பிய ஒரு சுதந்திர தேசத்தின் பிரஜையாக இருந்தாலும் இருப்பேனேயொழியக் குடிப்பவர்களே இல்லாத அடிமை நாட்டைச் சேர்ந்தவனாக இருக்க விரும்பமாட்டேன்.'' இதற்கு ஸி. ஆர். பதிலளிக்கும் விதமாக, ''உறுதியான இந்தப் போராட்டம் (மதுவிலக்கு) சுதந்திரம் பெறுகிற விஷயத்தையும் முன்னணிக்குக் கொண்டு வரும்'' என்றார்.6

மகாத்மா மதுவிலக்குத் திட்டத்தில் தீவிரவாதியாக இருந்த போதிலும் ஸி. ஆரின் யோசனையில் அவருக்கு நம்பிக்கை பிறக்கவில்லை. ''சுயராஜ்யக் கட்சிக்காரர்களைப் பகிரங்கமாக மதுவிலக்கு விஷயத்தில் வற்புறுத்துவது அவர்களைச் சங்கடத்துக்குள்ளாக்கும்'' என்று ஸி. ஆருக்கு எச்சரிக்கை செய்தார். இருப்பினும் மகாத்மாவே அதிசயித்துப் போகிற மாதிரி ஸி. ஆர்., சத்தியமூர்த்தியையும் சென்னை சுயராஜ்யக் கட்சித் தலைவர் சீனிவாச அய்யங்காரையும் தம் பக்கம் வென்று விட்டார்.7

சுயராஜ்யக் கட்சியினர் மதுவிலக்கைத் தங்கள் திட்டத்தில் ஏற்றுக் கொண்டதற்குப் பதிலாகப் பின்னால் அந்த ஆண்டில் நடைபெற இருந்த தேர்தல்களில் அவர்களுக்கு உதவ ஸி. ஆர். சம்மதித்தார். ஸி. ஆரின் வெற்றியை ஒப்புக் கொண்ட காந்தி, இந்தியா முழுவதிலுமுள்ள சுயராஜ்யக் கட்சியினரை உடனடியாகப் பூரண மதுவிலக்கு அமல் படுத்த வேண்டுமென ஏகோபித்த குரல் எழுப்புமாறு கேட்டுக் கொண்டார். அவர் மேலும் தொடர்ந்தார்: ''இந்தக் கோரிக்கை அரசினரால் ஏற்கப்படவில்லையெனில் அரசு மீது குற்றம் சுமத்த சுயராஜ்யக் கட்சியினருக்கு மேலும் ஒரு விஷயம் அகப்பட்டதாகும்.''8

காந்தியும் ஸி. ஆரும் எதிர்பார்த்தது மதுவிலக்குச் சட்டம் மட்டுமல்ல. மகாத்மாவின் சொற்களிலேயே கூறுவதென்றால் ஒவ்வொரு மதுக்கடையும் சிற்றுண்டி சாலையாகவும் மக்கள் கூடிப் பேசும் இடமாகவும் மாற வேண்டும் என்று ஆசைப்பட்டார்கள்.9

ஸி. ஆருக்கு மதுவிலக்கில் இருந்த மோகமானது சுயராஜ்யக் கட்சியினருடன் வியத்தகு முறையில் ஒரு பிணைப்பை உருவாக்கியிருந்தது. அவர் தந்த இந்த ஒத்துழைப்புக்குத் தெற்கே ஜாதிப் பிரச்னை ஒரு மோசமான சூழ்நிலையை அடைந்ததும் ஒரு காரணமாக இருந்திருக்கலாம்.

(தொடரும்)

தமிழாக்கம்: கி. ராஜேந்திரன்



5. ஸி. ஆர். காந்திக்கு எழுதியது, ஜனவரி, 1926, SN 10684, ராஜ்காட் சங்கிரஹாலயம்
6. சத்தியமூர்த்தி, ஸி. ஆர். அறிக்கைகளுக்கு ஆதாரம்: ஹிந்து 1-1-26
7. ஸி. ஆர். மகாதேவ தேசாய்க்கு எழுதியது, 20-1-26, SN 10687, ராஜ்காட் சங்கிரஹாலயம்
8. மகாதேவ தேசாய் டயரி, சர்வ சேவா சங்கம், வாரானஸி, பாகம் 8, பக்கம் 83
9. யங் இந்தியா 8-9-27.

---

நோயாளி: டாக்டர் ராத்திரி படுத்தா ஒரே காதல் கனவா வருது டாக்டர்.

டாக்டர்: இதுக்கு ஏன் வருத்தப்படறீங்க?

நோயாளி: கனவு பூராவும் பிளாக் அண்ட் ஒயிட்டிலேயே வருது. அது ஈஸ்ட்மென் கலரில் வர ஏதாவது ஒரு வழி பண்ணுங்களேன் டாக்டர்.

ஆர். கோபாலகிருஷ்ணன்



வெண்மை ஒளிவீசிப்
பளிச்சிடும்
பார்த்தவரெல்லாம் கூறுவர்...

இது
டெட்
டிடர்ஜெண்ட்
கட்டியின்
சலவை




Shilpi DM 35A/78 Tam



# மனம் கவர்ந்த மலேஷியா

**சிவசங்கரி**





இன்றைக்கு மலேஷிய வானில் அமர்க்களமாய்ப் பறந்து, கீதம் இசைக்கும் வானம்பாடியின் ஆண்டுவிழா கோலாலம்பூர் நகர மண்டபத்தில், எழுத்தாளர்களும், நண்பர்களும் புடைசூழ வந்து வாழ்த்துக் கூறச் சிறப்பாய் நடந்தேறியது.

அன்று காலை குமணனையும், மற்றவர்களையும் பார்த்தபோது என்னைப் பற்றியும், நான் இலக்கணத் தமிழை நன்கு அறியாததைப் பற்றியும் சொன்னேன்.

''இரண்டு நாட்களாக உங்களோடு பேசிப் பழகியவன் என்ற முறையில்: நேற்று டி.வி.க்கும், ரேடியோவுக்கும் நீங்கள் பேட்டி கொடுத்தபோது உடன் இருந்து கவனித்தவன் என்ற முறையில், சொல்கிறேன் – நீங்கள் நீங்களாகவே இருங்கள், உங்கள் இயல்பான பேச்சு, கருத்துக்கள் எங்களுக்குப் பிடிக்கிறது. மற்றவர்களிலிருந்து நீங்கள் மாறுபட்டு இருக்கிறீர்கள் என்பதில் எங்களுக்கு மகிழ்ச்சிதான்'' என்றார் குமணன்.

குமணன் இப்படிச் சொன்னதில் எனக்கு ரொம்ப நிம்மதியாகி விட்டது. முக்கிய விருந்தினராய் விழாவில் பங்கேற்று என் எழுத்துலக அனுபவங்களை விவரித்தபோது எனக்கு எந்தவித தயக்கமும் இருக்கவில்லை.

விழாவில் மந்திரி திரு. பத்மநாபன் கலந்து கொண்டு உரையாற்றினார். மலேஷிய தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவர் திரு. துரைராஜ் தலைமை தாங்கினார்.

சிங்கக் குட்டிபோல் மேடையில் முழக்கிய குமணன் வானம்பாடியின் பின்னணிக் கதையைச் சொன்னபோது அவரே உணர்ச்சி வசப்பட்டுப் போனார்.

1. வானம்பாடி விழாவில்
2 பத்து குகைவழி
3. தைப்பூசம் பிரார்த்தனை

பிரபல தமிழ்நாள் இதழ் ஒன்றில் வேலை பார்த்த நாற்பத்தைந்து ஊழியர்கள், மனக் கசப்பினால் வெளியேற்றப்பட்ட போது அவர்களுக்கு முழுப் பொறுப்பாகத் தான் முன் நின்றதையும், தன்னோடு கொண்ட நட்பின் காரணமாய்த் தன் பிளாஸ்டிக் தொழிற்சாலையை அடகு வைத்து 'வானம்பாடி' வார ஏட்டைத் துவக்க திரு அப்துல் காதர்





1. பழவகை வாணிபம்

2. இறந்தவெளி ஹோட்டல்கள்

முன் வந்ததையும் குமணன் கூறி ''நாங்கள் ஒவ்வொருவரும் ஆபீஸ் பையனாக, அச்சுக் கோப்பவராக, எழுதுபவராக, தயாரான வானம்பாடியைக் கடைக்குக் கொண்டு செல்லும் விற்பனையாளராக இருந்திருக்கிறோம். பல சமயங்கள் நான் கடைகளுக்குப் பத்திரிகை போடப் போகும்போது கடை உரிமையாளர்கள் நான்தான் ஆசிரியர் என்பதை அறியாமல் ''தம்பி'' இந்த வார இதழில் கதைகள் அருமை, ஆனால் கட்டுரைகள் நன்றாக இல்லை, ஆசிரியரிடம் சொல்! என்று சொல்லியிருக்கிறார்கள். 'ஆகட்டும் சொல்கிறேன்' என்று கூறிவிட்டு நான் அவர்கள் சொன்ன கருத்துக்களை சக ஆசிரியக்குழுவினருடன் விவாதித்ததுண்டு. துவக்கத்தில் ஐயாயிரம் பிரதிகள் விற்பனை ஆன வானம்பாடி ஒரே ஆண்டில் இன்று முப்பத்தெட்டாயிரத்தைத் தொட்டு, மலேஷியாவின் முன்னணி இதழாக இருக்கிறதென்றால் அதற்கு எங்கள் குழுவின் கூட்டு முயற்சி, உழைப்புத்தான் காரணம்' எனக் குமணன் ஆவேசத்தோடு கூறிய போது கைத்தட்டல்களினால் நகரசபை குலுங்கியது.

மறுநாள் ஊர் சுற்றிப் பார்க்கக் கிளம்பினோம். விழா இனிது முடிந்த திருப்தியில் இருந்த குமணன், தன் புதுக் கவிதைகளால் அந்நாட்டுத் தமிழர்களை ஒரு கலக்குக் கலக்கும் அக்னி, ராஜகுமாரன், அவர் மனைவி அனைவரும் உடன் வரக் கோலாலம்பூரின் இதயத் துடிப்பைக் காணப் புறப்பட்டோம்.

முதலில் பத்து குகைகளுக்குப் போனோம். வருவான் வடிவேலன் சினிமாவைப் பலர் பார்த்திருப்பீர்களே? அந்தப் படத்தில் வரும் Batu Caves என்னும் இடம் இது தான்.

சுண்ணாம்புக் கற்களால் ஆன பிரும்மாண்டமான மலைகளில் பல குகைகள் இயற்கையாய் அமைந்திருப்பதில் முருகன் குடிகொண்டிருக்கும் குகையும் ஒன்று.

சுமார் நூறு வருஷங்களுக்கு முன் கந்தஸ்வாமிப்பிள்ளை என்பவர் அந்தக் குகைகளைக் கண்டுபிடித்து, அங்கிருந்த முருகனைத் தினமும் வந்து வழிபடுவதைத் தம் பழக்கமாகக் கொண்டாராம். வெகு சீக்கிரத்திலேயே இந்த முருகனின் சக்தி பலருக்குத் தெரிய வந்து, கோவில் பிரசித்தம் அடைந்ததாம்.

தற்சமயம் பழனியில் உள்ளது போன்ற 'வின்ச்' அமைத்து, பாதி உயரத்தை அதன் மூலம் ஏற வழி செய்திருக்கிறார்கள். மலைக்குப் போகும் பாதைக்குக் கந்த ஸ்வாமிப் பிள்ளை சாலை என்று கோவிலைக் கண்டுபிடித்தவரின் பெயரைச் சூட்டியிருக்கிறார்கள்.

குகைகளின் அமைப்பு மனசைக் கவருவதாக இருக்கிறது. மேதாவி சிற்பி ஒருவர் பிரயத்தனப் பட்டுச் செதுக்கினமாதிரி அழகாய் வளைந்த குகை முகப்புக்கள்.

உள்ளே கர்ப்பக்கிருஹம் ரொம்ப சின்னது. ஸ்வாமி விக்ரஹமும் ஒரு முழம் இருந்தால் அதிகம்.

அர்ச்சனை செய்த குருக்களிடம் பேச்சுக் கொடுத்தேன். கோவிலின் தல புராணத்தைச் சொன்ன அவர் ''தை பூசம் இங்கு விசேஷமாக நடக்கும். இந்தியர்கள் மட்டுமல்லாது, சீனர்களும், மலாய்க்காரர்களும், ஆங்கிலேயர்களும் கூட இங்கு அலகு குத்திப் பிரார்த்தனை செலுத்துவது ரொம்ப சகஜம்'' என்றார்.

மலைக்குக் கீழே இன்னொரு குகையில் புராணங்களைச் சித்திரங்களாகத் தீட்டிக் கண்காட்சியாய் வைத்திருக்கிறார்கள்.

அவைகளைப் பார்த்துவிட்டு வரும்போது பலர் 'ஓ! நீங்கள்தானே நேற்று தும்புவான் மிங்குவில் (டீவி) வந்தவர்? உங்கள் எழுத்துக்களைப் பார்த்திருக்கிறோம். இன்று உங்களை நேரிலேயே காண்பது எங்கள் அதிர்ஷ்டம்' என்றவண்ணம் ஆங்காங்கு நின்று, மறித்துப் பேசினர்.

மலை அடிவாரத்தில் பெரிய கடை அமைத்து டூரிஸ்ட்டுகளைக் கவர மலேஷிய பதேக் துணிகள், மற்றும் குளிர்பானங்கள் விற்கும் திரு. ராஜா டீ. வி. பேட்டியை வெகுவாகச் சிலாகித்துப் பேசினார். நாங்கள் அருந்தின பானங்களுக்கும், உணவுப் பொருள்களுக்கும் பணம் வாங்கிக் கொள்ள மறுத்துவிட்டார். இப்படியே நாங்கள் சென்ற பல இடங்களிலும் புதிதாக நண்பர்கள் ஏற்பட்டு அவர்கள் காட்டிய அன்பு திக்குமுக்காட வைத்தது.

கோலாலம்பூரைச் சுற்றிப் பார்க்கக் கிடைத்த நேரத்தில் முதலில் என்னைக் கவர்ந்தது தெருவுக்குத் தெரு நின்றிருந்த பல கைவண்டி வியாபாரிகள்தாம். அவர்களில் முக்கியமாய், பழ வியாபாரிகள், பழச்சாறு வியாபாரிகள்.

மலேஷியா வருஷம் முழுதும் கிட்டத்தட்ட சீரான வெயில், மிதமான மழை என்று இருப்பதால் எந்த மாசத்திலும் அங்கு எந்தப் பழவகையும் கிடைப்பது சாத்தியமாகிறது.

ஒரு கை வண்டி; அதற்கு நிழல் கொடுக்கும் கலர் குடை, வண்டியில் கண்ணாடித் தடுப்புக்கள் கொண்ட நீளமான பெட்டி. இதில் ஒவ்வொரு பகுதியிலும் ஒவ்வொரு வகைப் பழம், ஒன்றில் அன்னாசி, மற்றதில் பலாப்பழம், இன்னொன்றில் சப்போட்டா — இப்படி. பழங்களைக் கைபடாமல் தோல் உரித்து, துணுக்கு துணுக்காக வெட்டி, ஐஸ் கட்டிகள் நிறைந்த பெட்டிகளில் அடுக்கி வைத்து நமக்கு எது வேண்டும் என்று சொல்கிறோமோ அதை லாகவமாய்க் குச்சியில் செருகிக் கொடுக்கிறார்கள். ஆறு பலாப் பழச் சுளைகளை, ஒரு குச்சியில் வரிசையாய்ச் செருகினவைகளை, கைபடாமல் பல்லால் கடித்துச் சாப்பிடுவது ஓர் அனுபவம்; பப்பாளி, அன்னாசிப் பழங்களை நீளத் துண்டங்களாய் வெட்டிப் பிளாஸ்டிக் உறையில் போட்டு இன்னொரு துணுக்காய் விற்கிறார்கள். பையைக் கீழே தள்ளி, பழம் கையில் பிசுக் பிசுக்கென ஒட்டாமல் சாப்பிடலாம்.

அப்புறம் அந்த வண்ண வண்ண பானங்கள்.

முதல்நாள் போய் இறங்கியதும் குமணன் முதல் கேள்வியாய் 'தண்ணி சாப்பிடுகிறீர்களா?' என்று கேட்டபோது வெறும் தண்ணீரை இந்த ராத்திரி நேரத்தில் எப்படிக் குடிப்பது என்று வேண்டாம் என்று சொல்லிவிட்டோம். 'பரவாயில்லை டீத்தண்ணியாவது குடியுங்கள்' என்று வற்புறுத்தியதும்தான் 'ஓஹோ, இது நம்மூர் தண்ணி இல்லை, வேறு தண்ணி' என்று புரிந்து கொண்டோம்.

டீத்தண்ணி, காப்பித் தண்ணி, மட்டும் மல்லாது அங்கு இருக்கும் தமிழர்களின் அகராதியில் கோக்கோ கோலா, பழ ரஸங்கள், இன்னும் பியர் மற்ற மது பானங்களும்கூட 'தண்ணி' தான்.

அன்று கோலாலம்பூரில் (இப்படி நீட்டி முழக்கிக் கொண்டு யாரும் சொல்வதில்லை. கே. எல். என்கிறார்கள். அவ்வளவுதான்) தெருத்தெருவாய் அலைந்தபோது ராஜகுமாரன் துணுக்கு துணுக்காய் எங்களுக்குத் தண்ணி வாங்கித் தந்தார். ஒரு கறுப்புத் தண்ணி, ஒரு வெள்ளைத் தண்ணி, ஒரு மஞ்சள் தண்ணி —



ஒருவகை பாசியிலிருந்து எடுக்கப்படும் ரஸம்தான் அந்தக் கறுப்புத் தண்ணி (இதற்கு என்ன பேர் என்று ராஜகுமாரனுக்கே தெரிய வில்லை).

ஸோயா பீன்ஸிலிருந்து எடுத்த ஸோயா பீன்ஸ் ஜூஸ் வெள்ளைத் தண்ணி; மற்றது ஆரஞ்சு ஜூஸ்.

அங்கெல்லாம் இந்தத் தண்ணிகளை டம்ப ளரிலும், புட்டிகளிலும் நிரப்பிக் கொண்டு குடிப்பதில்லை. எல்லாம் பிளாஸ்டிக் பைகளில் தான். பையினுள் ஒரு ஸ்டிராவைச் செருகி, வாயைக் கட்டிக் கொடுக்கிறார்கள். ஹாண்ட் பாக் மாதிரி அந்தப் பையைக் கையில் மாட்டி, உறிஞ்சிக் கொண்டே நடக்கலாம்.

போதாத குறைக்குக் கருப்பஞ்சாறு, இளநீர் வேறு. எனக்குத் 'தண்ணி' குடித்துக் குடித்தே அன்று வயிறு உப்பிப் போனது.

அந்த ஊர் இளநீர்களைப் பற்றி இங்கே கொஞ்சம் சொல்ல வேண்டும். ஒரு குடம் சைஸில் ஒவ்வொரு இளநீரும் இருக்கிறது; தாராளமாய் 2 அல்லது 3 கிளாஸ் தண்ணி. மலேஷியாவில் தேங்காய் வாங்கினால் அதை உடைத்துத் துருவித் தந்து விடுகிறார்கள். அங்கு தேங்காயும், இளநீரும் தண்ணீர் (நம்மூர்) பட்டபாடுதான்!

மதியச் சாப்பாட்டுக்கு ஒரு கடைக்குப் போனோம்.

''பெயர்ப் பலகையைப் படியுங்கள்'' என்றார் குமணன்.

'சாப்பாட்டுக் கடை' என்று தமிழ், மலாய், சீன மொழிகளில் கொட்டையாய் எழுதி இருந்தது.

''இதில் என்ன பெரிய சமாசாரம்?''—

''வாருங்கள் — உள்ளே வந்து பாருங்கள் புரியும்!''

போனோம். விஸ்தாரமான கூடம். வலது பக்கம் ஒரு மலையாளத்தார் இந்திய வகை உணவுகளைச் சமைத்து மேஜைகளில் அடுக்கி இருந்தார். இடது பக்கம் மலாய்க்காரர் தமது நாட்டு வகையறாக்களை ஜமாய்த்திருந்தார்.

''இந்தக் கடை ஒரு சீனருக்குச் சொந்தம். தண்ணி, ஐஸ் க்ரீம் மற்ற சில சீன பதார்த்தங்களை அவர் தயாரிப்பார்... ஆக; ஒரு கடைக்குள் நுழைந்தால் எந்த ரக உணவு பிடித்தமோ அதை உண்ணலாம். வகைக்கு ஒரு பதார்த்தமாக வாங்கியும் சாப்பிடலாம். அவரவர் வியாபாரம் மூலம் கிடைக்கும் வருவாய் அவரவர்க்கு. இந்தியரும் மலாய்க்காரரும் சீனருக்கு வாடகை மட்டும் கொடுக்க வேண்டும். இந்த மாதிரி மூன்று இனங்களும் ஒற்றுமையாய் வியாபாரம் நடத்தும் கடைகள் இந்நாட்டில் அதிகம். முக்கியமாய்ச் சாப்பாட்டுக் கடைகள்.''

பாராட்டுக்குரிய ஒற்றுமைதானே!

(தொடரும்)




டாக்டர்: உங்கப்பா மாதிரி ''பெரிய'' ஆளா ஆனா நீ என்ன செய்வே?

பையன்: ''வெயிட்''டைக் குறைக்க உங்ககிட்டே வழி கேப்பேன்!

- வெ. சீதாராமன்

# ராஜாஜியின் கடிதம்

என் தாயார் கடுமையான ஆஸ்த்மா நோயால் மிகவும் சிரமப்பட்டுக் கொண்டிருந்த சமயம், அநுபவமிக்க ராஜாஜி அவர்களின் ஆலோசனை கேட்டுக் கடிதம் எழுதினேன். கடிதம் கண்டவுடனேயே தம் கைப்பட அவர் தைரியம் கூறிப் போட்ட பதில் கடிதம் வருமாறு:

23.1.58.

அன்புடன்,

அம்மாவுக்குச் சொல்லவும். இழுப்பு நிற்கிறவரை அந்த (மருந்து) புகை பிடிக்கலாம். அதிகமாகப் பிடிக்க வேண்டாம். அவசியமானபோது மட்டும் உபயோகிக்க வேண்டும். பைத்தியம் பிடிக்காது ஒன்றும் பிடிக்காது. பயப்பட வேண்டாம். பத்தியம் இருந்தால் ஆஸ்த்மா நின்று போகும். ஆண்டவன் அருள். இரவு சாப்பாடு நிறுத்தி விடவும். பலகாரமும் வேண்டாம். பகலிலும் குறைவாகச் சாப்பிட வேண்டும். தினம் காலை வெறும் தண்ணீர் (வெதவெதவென்று இளஞ்சூடாக) ''எனிமா'' எடுத்துக் கொண்டு மலம் தங்காமல் பார்த்துக் கொள்ளவும். இம்மாதிரிப் பத்தியமும், ஜாக்கிரதையும், ரொம்ப அவசியமான சமயம் நுரிம்ராட் பொடியுமாக (புகை பிடிக்கும் மருந்து) வியாதியை நீக்கிக் கொள்ளலாம். பயப்பட வேண்டாம்.

இராஜகோபாலாச்சாரி

இவ்வளவு உறுதியாகத் தைரியம் கூறி அவர் எழுதிய அக்கடிதத்தை நான் இன்னமும் அரிய பொக்கிஷமெனப் பாதுகாத்து வைத்திருக்கிறேன்.

சென்னை—33

எஸ். வி. ராஜலட்சுமி ரங்கநாதன்.

# மஞ்சு சர்க்கஸுக்குப் போகிறள்

தமிழ் நாட்டைச் சேர்ந்த ஒருவரால் நடத்தப்படும் ஒரே சர்க்கஸ், வீனஸ். முப்பத்தைந்து ஆண்டுகள் வெற்றிகரமாக வடநாட்டில் சுற்றிவிட்டு முதன் முறையாகச் சென்னைக்கு வந்திருக்கிறது. சர்க்கஸின் உரிமையாளரும் போளூரைச் சேர்ந்தவரு மான திரு லால் அவர்களைச் சந்தித்தேன். ''இது சர்வதேசக் குழந்தைகள் ஆண்டு ஆன தால் கல்கி சார்பில் ஒரு குழந்தை விமர்சகரை அழைத்து வந்திருக்கிறேன்'' என்றேன்.

மஞ்சுவை அறிமுகப் படுத்தினேன்.

அழகான படபடக்கும் கண்கள். உணர்ச்சி பாவங்களை மத்தாப்புவாய் வாரிக் கொட்டும் முகம். துடியான பேச்சு. நுனி நாக்கில் குதி போடும் அற்புதமான ஆங்கிலம், மானைப் போன்ற துள்ளல் –

தாம்பரம் Christ King கான்வென்டில் முதல் வகுப்பு படிக்கும் மஞ்சுவுக்கு ஆறரை வயது.

துணைக்காகத் தன் தோழி சூடாமணி யையும் அழைத்து வந்திருந்தாள். மஞ்சுவுக்கு V. I. P. வரவேற்புதான்!

சர்க்கஸ் மானேஜர் கோபிநாதன் சர்க்கஸ் காரர் ஒருவரை உடன் அனுப்ப, மஞ்சுவை யும் சூடாவையும் மிருகங்களிடையே அழைத்துப் போனேன்.

இரண்டு குதிரைகள் புல் தின்னும் விஷ யத்தில் பயங்கரமாகச் சண்டை போட்டுக் கொண்டிருந்ததைக் கண்டு மஞ்சு அடக்க மாட்டாமல் ஆர்ப்பரித்தாள்.

முதலில் தயங்கிய மஞ்சு பிறகு ஜம்மென்று ஒட்டகத்தின் மீது உட்கார்ந்து கொண்டாள்.

யானைக்குக் கரும்பு கொடுத்தாள். யானை மீது உட்கார மறுத்து விட்டாள். சுமார் ஏழெட்டு யானைகள் பின்னணியில் நிற்க நாலைந்து அடிகள் முன்னால் நின்று புகைப் படம் எடுத்துக் கொண்டாள்.

சிங்கத்தை அருகில் காண மஞ்சுவுக்குப் பயம்.

கரடி, குரங்குகள் ஆகியவற்றின் சேஷ்டை களையும் சற்றுத் தள்ளி நின்றே பார்த்தாள்.

இதற்குள் சர்க்கஸ் ஆரம்பமாகும் நேரம் நெருங்கவும் கொட்டகை உள்ளே அழைத்துச் செல்லப் பட்டோம்.

நல்ல கும்பல்.

மஞ்சுவுக்கும் அவள் புண்ணியத்தில் எனக் கும் புகைப்படக் காரருக்கும்கூட முதல் வரிசை ஒதுக்கப்பட்டது.

காட்பரீஸ், பாப்கார்ன், கூல் டிரிங், பிஸ் கெட் என்று மஞ்சுவுக்கும் சூடாவுக்கும் சர்க் கஸ் உரிமையாளர் சார்பில் தீனிகள் வழங்கப் பட்டவண்ணம் இருந்தன.

'டிரபீஸியம்' சர்க்கஸ் வேலைகளுடன் காட்சி ஆரம்பமாகியது. இந்தக் கோடிக்கு அந்தக் கோடி கயிற்றில் பறக்கும் இளைஞர் களையும், யுவதிகளையும் கண் கொட்டாமல் மஞ்சு பார்த்தாள்.

⌘ முதலில் யானை மீது ஏறப் பயப்பட்ட மஞ்சு சர்க் கஸ் பார்த்து முடிந்த பிறகு தோழி சூடாமணி யுடன் சேர்ந்து தைரியமாக ஏறிக் கொண்டாள். அருகில் சர்க்கஸ் அதிபர் லால்.







Λ மஞ்சுவுக்கு முதல் வரிசையில் இடம்.

< ஒட்டகத்தின் மேல் மஞ்சு.

நான்கு பாட்டில்கள் மேல் ஒரு ஸ்டூல். அதன் மேல் மூன்று பாட்டில்கள். அதன் மேல் ஸ்டூல் என்று சுமார் ஏழெட்டடி உயரத்திற்கு மேல் போடப்பட்ட ஒரு மரத்துண்டில் நின்று கொண்டு சுமார் ஆறேழு வயதே நிரம்பிய சீமா செய்த அபாயகரமான பயிற்சிகளைக் கைதட்டி ரசித்தாள் மஞ்சு.

"ஏன்டீ சூடா... விழுந்துட மாட்டாளா?" என்று தோழியிடம் பயம் கலக்க மஞ்சு கேட்டாள்.

"விழுந்தா பிடிக்கக்கத்தான் பக்கத்துலெ மாமாவெல்லாம் இருக்காளே!" என்று பெரிய மனுஷி மாதிரி சூடாமணி பதில் அளித்தாள்.

Circus March Past நடந்தது. யானைகளும், கரடி, குரங்கு ஆகியவையும் மிகமிக அருகில் வந்த போது மஞ்சுவுக்கும் சூடாவுக்கும் உள்ளூற உதறல்தான்.

சர்க்கஸ் குள்ளர்கள்தான் மஞ்சுவை அதிகம் கவர்ந்தனர். சர்க்கஸ் கோமாளிகளும், குள்ளர்களும் கார் சவாரி செய்த போது அடக்கமாட்டாமல் சிரித்தாள்.

சீமா பங்கேற்கும் ஒவ்வொரு காட்சியையும் அதிகமாக மஞ்சு ரசித்தாள்.

ஒரு மோட்டார் காரும், மோட்டார் சைக்கிளும் எதிரும் புதிருமாகப் பத்தடிக்கு மேலாகத் தாண்டுவதைக் கண்டபோது பயத்தோடு மஞ்சு சூடாவைக் கட்டிக் கொண்டாள்.

'க்ளோப்' மோட்டார் சைக்கிள் சவாரி முடிந்ததும் மஞ்சு சொன்னது: "சூடா She is a girl டீ!"

கடைசியில் மஞ்சு ஆவலாக எதிர்பார்த்த காட்சிகள் வந்தன.

குடித்து விட்டுத் தள்ளாடும் யானையின் நடவடிக்கையைக் கண்டு வயிற்றைப் பிடித்துக் கொண்டு மஞ்சு சிரித்தாள். சுமார் பதினைந்து யானைகளின் அணிவகுப்பு நடந்தது. கடைசியாக நான்கு சிங்கங்களைக் கூண்டு கட்டாமல், கழுத்தில் கயிறு மட்டும் கட்டி மேடையில் அணிவகுக்கச் செய்தனர். மஞ்சுவுக்கு அருகிலிருந்த ஓர் ஆண் சிங்கம் இடக்கு செய்து கத்திக் கொண்டே இருந்தது. மஞ்சுவுக்கு மட்டுமல்ல, எங்களுக்கும் பயம்தான்!

காட்சி முடிந்தது.

திருலால், மஞ்சுவைக் காண ஓடிவந்து விட்டார். மறுபடியும் மஞ்சுவையும் சூடாமணியையும் தாமே அழைத்துப் போய் மிருகங்களைக் காட்டினார்.

இப்போது தைரியத்துடன் மஞ்சு சூடாமணியையும் துணையாகக் கொண்டு யானை மேல் உட்கார்ந்து கொண்டாள். குழந்தைகளுக்குப் பாதுகாப்பாகத் திருலாலும் அருகே நின்றுகொண்டார்.

விடை பெற்றோம்.

"மஞ்சு! ஹவ் டு யூ லைக் த சர்க்கஸ்?" என்று கேட்டபோது...

"இட் ஈஸ் ஃபைன்... ஐ லைக் குள்ளபுஸ்கா அப்புறமா... எலிபெண்ட் பிடிச்சிருந்தது... சிங்கம் பிடிக்கலே... சீமா ஐ லைக் வெரிமச்" என்றாள் மஞ்சு.

ஏற்பாடு: கோகுல்

புகைப்படம்: மனோமூர்த்தி

---

"ஒன்று கிழங்கிலும் தூக்கமாத்திரை ஒன்பதை கிழங்கிலும் தூக்கமாத்திரை"

— கே.ஆர்.எம்

# வேகப் போட்டியில் GO SLOW




1. மோட்டார் சைக்கிள் ரேஸ் புறப்பட ஆயத்தம்.

**சோ**ழவரம் நோக்கிப் பத்திரிகைப் பிரதிநிதிகள் அடங்கிய விசேஷ பஸ் வேகமாக முன்னேறிக் கொண்டிருந்தது. பஸ் டிரைவர் 'சடன் பிரேக்' போடப் பத்திரிகைப் பிரதிநிதிகள் ஆசனத்திலிருந்து உருண்டனர். பாதையோரத்தில் மோட்டார் சைக்கிள் மீது விழுந்து கிடக்க, தலை தப்பிய இருவர் பரிதாபமாக நின்றனர்!

''என்ன ஸார், வேகம்! கொஞ்சம் நம்ம டிரைவர் பார்த்து ஓட்டலேன்னு பெரிய ஆக்ஸிடெண்ட் ஆயிருக்கும்!''

''மோட்டார் ரேஸுக்குப் போற வேகம் அவரை அடுத்த உலகுக்கே அனுப்பிடும் போலிருக்கே?''

''ஸார்! பல்லவன் பஸ் டிரைவர் மோட்டார் ரேஸில் கலந்துண்டா எப்படியிருக்கும்?''

''கொஞ்சம் வாயை மூடிண்டு வாங்க! இந்த அனுபவம் போதாதா? நாம சோழவரம் ரேஸுக்குப் பத்திரமா போய்ச் சேரணும்! நம்மைப்பத்தி 'நியூஸ்' வரும்படி ஆயிடப் போவுது!''

• • •

''மலேசிய ஏர்லைன்னில் ''Go Slow!'' ஸ்டிரைக்! அதனால் மலேசியாவிலிருந்து வர்ற ரேஸ் காரங்க அவங்க வாகனங்களோடு வந்து சேர முடியல்லே!''

''சாமி வரம் கொடுத்தும் பூசாரி வரம் கொடுக்காத கதை!''

• • •

''டெரிக் லோன் லண்டனில் மோட்டார் சைக்கிள் காரேஜ் வைச்சிருக்கார்! அவருக்கு மெக்கானிக்காக ஜான் ப்ளான்னகன் கூட வந்திருக்கார்! இப்போ அந்த மெக்கானிக், மலேசிய ஆட்டக்காரங்க வராததினுலே போட்டியில் கலந்துக்கப் போறாரு!''

''ஒரே 'லோன்' மயமாயிருக்கே!''

''ஷெரீப் தயான் இலங்கைக் க்ராண்ட் ப்ரீ வெற்றி பதிர்ச்சியிலே 'ஹார்ட் அட்டாக்' சம்பாதிச்சண்டார்! அதனுலே ஷெரீப் தயான் போட்டியிலே கலந்துக்காமே லண்டன் மெக்கானிக்குக்கு வண்டியைக் 'கடனு'க் கொடுத்துட்டார்!''

டெரிக் லோன் இங்கிலாந்தில் பல அரிய வெற்றிகளைப் பெற்றவர். சோழவரத்தில் இரு இரண்டாம் பரிசுகளை மோட்டார் சைக்கின் பந்தயங்களில் சூடிக் கொண்டார்.

• • •

மோட்டார் சைக்கிள் பந்தயத்தில் இரு முதல் பரிசுகளைப் பெற்றுத் தமிழக முதல்வர் எம். ஜி. ஆரை மைதானத்துக்கு வந்து சேர்ந்து படம் எடுத்துக் கொள்ள வைத்தவர் கென்யாவைச் சேர்ந்த பில் டீ காரில். கண்ணுடி அணிந்த பில் டீ காரில் ரேஸ் ஆரம்பிப்பதற்கு அரைமணி முன்னுலே தம் வண்டியைக் கிளப்பிப் போட்டியில் கலந்து கொள்ளத் துடிப்புடன் நின்றவர்! நியூஸிலாந்து நாட்டைச் சேர்ந்த பில் டீ காரில் கென்யா வில் குடியேறியிருப்பவர். 1977ம் வருஷமே அகில இந்திய கிராண்ட்





3. மோட்டார் சைக்கிள் கிராண்ட் ப்ரீ வெற்றியாளர் பில் ஷகாரில்; மோட்டார் ரேஸ் கிராண்ட் ப்ரீ வெற்றியாளர் நாஸிர் ஹுசேன்.

ப்ரீயைச் சென்னையில் வென்றவர். 1978ல் பம்பாயிலும், இலங்கையிலும் கிராண்ட் ப்ரீ சாம்பியன்.

• • •

சூர்ஜித் சிங் ஜாவா கிராண்ட் ப்ரீ போட்டியில் முதன்மை யுற்றார்! மோட்டார் வியாபாரம் இவரைப் பந்தயத்திலும் இழுத்து விட்டிருக்கிறது!

• • •

''கொண்டல் மகாராஜா போகும் வேகத்தைப் பார்த்தா அவருக்குத்தான் முதல் பரிசு கிடைக்கும் போலிருக்கு!''

''அடடா நாலாவது 'லாப்' புக்குப் பிறகு அவரைக் காணல்லே! மகாராஜா எங்கே மறைஞ்சார்!''

2. கொண்டல் மகாராஜா அசுர வேகத்தில் சென்று திருப்பத்தில் சக்கர வளையமிட்டுப் போட்டியை விட்டே விலக நேர்ந்த தருணம்!

''வண்டியில் ஏதோ கோளாறு! கிராண்ட் ப்ரீ பந்தயம் கொண்டல் மகாராஜா இல்லாம சோபிக்கல்லே!''

''அடுத்த வருஷம் ஒரு கைபார்க்கிறேன்'' என்கிறார் கொண்டல் மகாராஜா!

• • •

கார் ரேஸ் கிராண்ட் ப்ரீ வெற்றியாளர் நா: ுசேன் கைகளைப் பற்றிக் குலுக்கினேன்!

''இந்தக் கிராண்ட் ப்ரீ வெற்றி இரண்டாவது தடவை. முதல் வெற்றி இலங்கையிலே சம்பாதித்து விட்டேன்! ஆனால் சென்னையில் இதுதான் முதலாவது தடவை!' என்றார் நாஸிர் ஹுசேன்.

இருபத்தைந்தாவது வயதிலிருந்து பன்னிரண்டு வருஷங்களாகக் கார் ரேஸில் ஈடுபட்டு வருபவர் நாஸிர் ஹுசேன். இவருக்கு பம்பாயில் மோட்டார் வாணிபமும் சினிமாத் தொழிலும் உண்டு.

• • •

இத்தனை கார்களும் மோட்டார் சைக்கிள்களும் வாயுவேக மனோவேகமாக ஓடிய போதிலும் சோழவரம் பந்தயத்தில் பெரிய ஆக்ஸிடெண்டே தலை காட்டாதது தனிச் சிறப்பு!

**குண்டுமணி**

படங்கள்: ஏ. பி. மாலிலாமணி

---

அந்த மனோதத்துவ நிபுணர் நோயாளியின் நிலைமை நன்கு உணர்ந்து வைத்தியம் செய்வார். கார் மெக்கானிக்கை கட்டிலுக்கு அடியில் படுத்துக் கொள்ளச் சொல்லி விட்டு சிகிச்சை செய்வார் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்! —ஜோக்ஸ் 1001 —ராமு.



# புதுக் கவிதை பழசாகிவிடுமா?



"இது புதுக்கவிதை வரலாறுதான், புதுக் கவிதைகள், அறிஞர்கள் பற்றிய விமரிசனமோ, ஆய்வுரையோ அல்ல" என்கிற முன்னுரையுடன் திரு வல்லிக் கண்ணன், இவ்வாண்டு சாகித்ய அகாதமியின் பரிசைப் பெறும் 'புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும்' நூலைத் தொடங்கியுள்ளார்.

"பாரதியாரின் 'வசனக் கவிதை'களில் தொடங்கி கு. ப. ராஜகோபாலன், நா. பிச்சமூர்த்தி ஆகியோர் எழுதிய புதுக் கவிதைகளைக் கவனித்து, தற்போது இத்துறையில் சிறப்புற்று விளங்கும் மு. மேத்தா, எஸ். வைத்தீஸ்வரன், கலாப்ரியா போன்றவர்களின் கவிதைகளையும் விட்டு விடாமல் குறிப்பிட்டிருக்கிறார். சுவை மிகுந்த ஏராளமான புதுக்கவிதைகளைச் சிதைவில்லாமல் முழுமையாக எடுத்துக்காட்டுக்களாய்த் தந்திருக்கிறார்.

"நான் இந்த வரலாற்று நூலை எழுதியிருந்தால் என்னை அறிந்தும் அறியாமலும் ஒரு பக்கமாக அழுத்தம் கொடுத்திருக்கக் கூடும். ஆனால் வல்லிக் கண்ணனே 'தானை' ஒதுக்கிவிட்டு அன்று முதல் இன்றுவரை உள்ள புதுக்கவிதைப் படைப்புகளுக்கும், போக்குகளுக்கும், கொள்கைகளுக்கும் இனி இயக்கங்களுக்கும் படைப்பாளிகளுக்கும் சரித்திர நியாயம் கிடைக்கச் செய்திருக்கிறார்" என்று திரு. சி. சு. செல்லப்பா இப்புத்தகத்தைப் பற்றி விமரிசனம் செய்திருக்கிறார்.

திரு வல்லிக் கண்ணனை அவரது இல்லத்தில் சந்தித்தேன். ஊற்றுகளை உள்ளடக்கிக் கொண்டு சாதாரணமாகத் தெரியும் மணல் வெளியைப் போன்றதோர் எளிமையான தோற்றம்.

சாகித்ய அகாதமி பரிசு வழங்கப்படும் போது ஒவ்வொரு வருடமும் அது சம்பந்தமாக ஏதேனும் சர்ச்சைகள் தோன்றாமல் போவதில்லை. இவ்வாண்டும் 'எத்தனையோ சிறப்பான படைப்பிலக்கியங்கள் இருக்கும் போது, அவற்றைப் புறக்கணித்து ஆராய்ச்சி இலக்கியத்தைப் பரிசுக்காகத் தேர்ந்தெடுத்திருக்கிறார்களே, இது எவ்வகையில் நியாயமானது?' என்று ஒரு சாரார் வாதிட்டுத்தான் வருகின்றனர். இது சம்பந்தமாக வல்லிக்கண்ணனிடம் கேட்டபோது அவர் சொன்னது:

"ஆக்க பூர்வமானதோ அல்லது ஆய்வு ரீதியானதோ எப்படி இருந்தாலும் சரி, குறிப்பிட்ட மொழியில் அது உயர்ந்த தரத்ததாய் உள்ளது என்று கருதப்படுமானால் அகாதமி பரிசுக்குத் தகுதியானதாகும். இப்படித் தெளிவாக சாகித்ய அகாதமியின் நடைமுறை விதி அறிவித்துள்ளது. இதற்கு முன்பே திருக்குறள் ஆய்வு நூல் ஒன்றுக்கும், தமிழ் நாவல் ஆய்வு ஒன்றுக்கும் பரிசு அளிக்கப்பட்டுள்ளது.

"புதுக்கவிதை பற்றிய வரலாற்று ரீதியான விமர்சன நூலுக்குப் பரிசளிக்கப்பட்டிருப்பதைக் கவிஞர்களும், இலக்கிய ரசிகர்களும் உற்சாகத்துடன் வரவேற்றுப் பாராட்டி மகிழ்கிறார்கள். தமிழ்ப் புதுக்கவிதைக்கு அகில இந்திய ரீதியில் கிடைத்த ஓர் அங்கீகாரமாக இதைப் பலரும் மதிக்கிறார்கள். புதுக்கவிதை வங்காளம், ஆந்திரம், மலையாளம் மற்றும் சில மொழிகளிலும் தீவிர வளர்ச்சி பெற்று அந்தந்த மொழி இலக்கியங்களில் வலுவான ஸ்தானத்தைப் பெற்றுள்ளது. தமிழில் இது காலந்தாழ்த்தி ஏற்பட்ட விழிப்பு என்றே சொல்ல வேண்டும்."

புதுக்கவிதையின் எதிர்காலம் பற்றி திரு. வல்லிக்கண்ணன் என்ன நினைக்கிறார்?

"மரபுக் கவிதைகளில் சொல்ல முடியாததை — அல்லது மரபுக் கவிதையில் சொல்ல முடிகிறதைவிட அதிகமாகவும் நயமாகவும் சுதந்திரமாகவும் தங்கள் எண்ணங்களை — புதுக் கவிதை மூலம் வெளியிட முடியும் என்ற உணர்வு மரபுக் கவிதை எழுதி வந்தவர்களில் பலருக்கே ஏற்பட்டுள்ளது. இவ்வாறு இருக்கிறபோது அதன் எதிர்காலம் குறித்து அவநம்பிக்கைக் கொள்ள வேண்டிய அவசியம் எதுவுமே இல்லை."

"புதுக்கவிதையின் தோற்றமும் வளர்ச்சியும்" வெளியீடு: எழுத்து பிரசுரம், 19A, பிள்ளையார் கோவில் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை-5; விலை ரூ. 15/-

பேட்டி: ரங்கா. புகைப்படம்: மன்னை மூர்த்தி.

Printed by V. Murali and published by V. Vaidyanathan on behalf of Messers Bharathan Publications Private Ltd., at the Bharathan Press, Guindy, Madras-600032. Editor: K. Rajendran

# எங்கள்
# மறுவாழ்வுப்பணித் திட்டம்



புயலால் பாதிக்கப்பட்ட ஆந்திரப் பிரதேசத்தின் பகுதிகளில் நீண்டகால மறுவாழ்வுப் பணி செயல் படுத்தப்பட்டுள்ளது. நிலவரி ரத்து, நெசவாளர்கள், கைவினைஞர்கள், மீனவர் ஆகியோர்க்கு உதவிபுரிவது மறுவாழ்வுப் பணித்திட்டத்தின் முக்கிய அம்சமாகும். முக்கியமாக விவசாயப் பெருங்குடி மக்களுக்கு மட்டும் மாகாண அரசு 7.34 கோடி ரூபாய்களுக்கு நிலவரியை ரத்து செய்ய ஆணை பிறப்பித்துள்ளது.

41,800 நெசவாளர், 14,000 மீனவர் ஆகியோர் தங்கள் தறி, மீன்பிடிப் படகு, நைலான் வலை ஆகிய வற்றை இழந்துள்ளதாக மதிப்பிடப்பட்டுள்ளது.

மீனவர்களின் மறுவாழ்வுப் பணிக்காகச் செல விடப்பட்டுள்ள தொகை மட்டுமே ரூ. 161.23 லட்சங்கள். நெசவாளருக்கு மறுவாழ்வுதரச் செலவிடப்பட்டுள்ளது 225 லட்சங்கள். சக்கிலியர், கருமார், தச்சர், மரமேறி பல்துறை போன்ற கைவினைஞர்கள் 7500 பேர்களுக்கு மேல் உதவி அளிக்க 68.5 லட்சங்கள் செலவிடப் பட்டுள்ளன.

D.G. I & P.R. 36/78-79

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேசியக் காசு